ஸாத்விகநாஸ்திக்யாதிகளும் இதுக்கநபேக்ஷிதமாகையாலே இந்த ஸர்வஶப்தத்திலே உபாத்தமாகுமோவென்னில்; அவை உபாயோபகாரமுமின்றிக்கே உபாயஸ்வீகாராங்கமுமின்றிக்கேயிருந்தாலும் ஸித்தோபாயத்திலே அதிக்ருதனானவனுக்கு அந்தவுபாயபலமாய்க்கொண்டு ஸம்பாவிதங்களான ஸ்வபாவங்களாகையாலே ப்ராப்யத்வேந உபாதேயமாமத்தனையொழிய த்யாஜ்யமாகாது;

ஆத்மகுணமானவிவை த்யாஜ்யமென்னில், ஶேஷஶேஷித்வ ரக்ஷ்யரக்ஷகத்வ போக்த்ருத்வ போக்யத்வ ஜ்ஞாநாதிகளும் த்யாஜ்யமாகவேண்டிவரும்; அப்போது ஸ்வஸத்தாபோகாதிகளுமின்றியிலேயொழியும்; ஆகையாலே ஶமதமாதிகள் த்யாஜ்யமென்னவொண்ணாது;

இஸ்ஸர்வஶப்தத்திலே, (௧) "லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பஶ்யந் கர்துமர்ஹஸி - லோகஸங்க்ரஹமேவாபிஸம்பஶ்யந்கர்த்துமர்ஹஸி" என்று லோகத்திலுள்ளார் ஆதரிக்கைக்கு உறுப்பாகவுமநுஷ்டிக்கைக்கு; அர்ஹனாகாநின்றாயென்ற பூர்வோக்ததர்மங்களும், புத்ரனைப்பற்ற பிதா அநுஷ்டிக்கும் ஜாதகர்மநாமகரணாதிகளும் த்யாஜ்யதயா உபாதாநம் பண்ணப்படுகிறது.

ஸ்வீகார்யமான வுபாயம் ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தப்ரவ்ருத்திநிரபேக்ஷமாயிருக்கையாலே கர்மாநுஷ்டாநத்தாலேம்ருதிதகஷாயனாய் ஜ்ஞாநயோகத்தைப்பெற்ற வதிகாரி ஸாத்யஸித்யநந்தரம் ஸாதநஸாபேக்ஷையில்லாமையாலே அந்தக்கர்மத்தை நிவர்த்திக்கில், ஜ்ஞாநயோகாநுகுணனாகமில்லாதவனும், (௨) "யத்யதாசரதி ஶ்ரேஷ்ட:- யத்யதாசரதிஶ்ரேஷ்ட:" என்கிற ந்யாயத்தாலே கர்மாநுஷ்டாநத்தைத்தவிரும்; ஜ்ஞாநயோகத்திலந்வயமில்லாதே கர்மத்தைவிட்டால் உபயப்ரஷ்டனாய் நஶிக்கும்; அவனுக்கு நாஶகரமானபாபம் கர்மத்தினின்றும் நிவ்ருத்தனான ஜ்ஞாநயோகாதிகாரியை ஸ்பர்ஶிக்கும்; ஆகையாலே ஜ்ஞாநயோகத்துக்கு ப்ரதிபந்தகமாகையாலே அவனுக்கு லோகஸங்க்ரஹார்த்த ப்ரவ்ருத்திகளும் ஜாதகர்மநாமகரணாதிகளும் அநுஷ்டிக்கவேணும்; இவன் ஸித்தஸாதநஸ்வீகாரம் பண்ணினவனாகையாலே ஸாத்யமானஜ்ஞாநயோகலாபமில்லையென்

(௧) கீ-௩ ௨௦ (௨) கீ-௩ ௨௧

கிறவுபாயமில்லாமையாலும், ஸ்வீக்ருதமானவுபாயம் "நச்சுமாமருந்தம்" என்கிறபடியே அபத்யஸெஹௌஷதமாகையாலே பாபஸ்பர்ஶமுண்டாமென்கிற பயமில்லாமையாலும், "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்கிற வுபாயத்தைப் பற்றுகையாலே ஸ்வநிவர்த்யமாயிருப்பதொரு பாபமில்லாமையாலும், இவனுக்கு அநுஷ்டேயமல்ல; இனி அநுஷ்டித்தானாகில் ஆந்ருஶம்ஸ்யப்ரேரிதனாய் அநுஷ்டித்தானாமித்தனை; புத்ரார்த்தமான புமஸவநாதிகளும் பாபபயப்ரேரிதனாயநுஷ்டிக்கக்கடவனல்லன்; உபாயோபகாரபுத்திபாவமின்றிக்கே கர்த்தவ்யபுத்திபாவமின்றிக்கே ஆந்ருஶம்ஸ்யத்தாலே செய்கையாலே அதுவும் பாபவிஶேஷணமான ஸர்வஶப்தத்திலே அந்தர்ப்பூதமாய் மோக்ஷயிஷ்யாமியிலே அந்வயித்து ஈஶ்வரனை நிவர்த்யமாம்; ஆகையாலே லோகஸங்க்ரஹார்த்தப்ரவ்ருத்தி இவனுக்கு த்யாஜ்யமென்றதாயிற்று.

சிலர் போக்யதாபாதகதர்மங்கள் அப்ருதக்தர்மங்களாகையாலும், தர்மஶப்தம் ஸாங்கமான ஸாதநதர்மத்தைச் சொல்லுகையாலே போக்யதாபாதகங்களும் தர்மஶப்தந்தன்னிலே உக்தமாகையாலும், தர்மஶப்தவிஶேஷணமான ஸர்வஶப்தம் போக்யதாபாதகதர்மவாசகமாட்டாது; ஆகையால் ஸர்வஶப்தம் ஸாகல்யவாசியாமித்தனை யென்பர்கள்; தர்மஶப்தம் ஶ்ரேயஸ்ஸாதநதர்மவாசியாகையாலே போக்யதாபாதகதர்மவாசகமாகமாட்டாமையாலும் ஸாகல்யம் தர்மஶப்தகதமான பஹுவசநத்தாலே ஸித்தமாகையாலும் போக்யதாபாதகதர்மமுங்கூட த்யாஜ்யதர்மவாசகதர்மஶப்தவிஶேஷண ஸர்வஶப்தத்திலே உபாத்தமாய் த்யாஜ்யமென்கையாலே தர்மங்களினுடைய நிரவஶேஷத்யாகமும் பலிக்கையாலும், ஸம்ப்ரதாயஸித்தஸதாசார்யர்களெல்லாரும் ஸர்வஶப்தம் போக்யதாபாதக தர்மவாசகமாக வருளிச்செய்கையாலும், ஸாகல்யவாசியென்கிறது அர்த்தமன்று;

இந்த தர்மங்கள் உபாயோபயோகியன்றாகிலும், (க) "விஹிதத்வாச்சாஶ்ரமகர்மாபி" என்று வர்ணாஶ்ரமவிஹிதமாகையாலே யநுஷ்டேயமாகாதோவென்னில்; உபாயப்ரகரணமாகையாலே உபாயத்துக்கு யோக்யதாபாத(ஜ)கமாயிற வாகார

(க) ப்ரஹ்மஸூ-௩-௪-௩௨

மொழிய விஹிதமாய்வருகிற வாகாரம் இவ்விடத்திலே அப்ரஸ்துத மாகையாலே த்யாஜ்யமாகாதென்னவொண்ணாது;

அதலா; ஸ்வர்க்கபுருஷார்த்தஸித்த்யர்த்தமாக ஜ்யோதிஷ்டோமத்திலே தீக்ஷித்தவனுக்கு நித்யாதிகள் த்யாஜ்யமாமாபோலே மோக்ஷார்த்தமாக வித்ததர்மஸ்வீகாரமாகிற யாகத்திலே தீக்ஷித்தவனுக்கும் விஹிதாப்ரமும் த்யாஜ்யமென்னவுமாய்;

(க) "ஶ்ரேயம்ஸாம்ஸ்யாஸ-தஸ்யைவம்விதுஷ:" என்கிற வநுவாகத்தாலே ஸாணவரணத்தையும் ஒருபாசமாக நிரூபித்தானிறே வேதபுருஷன்; ஆனாலும், இவை பகவத்விஷயத்துக்கு ஆஜ்ஞாரூபகைங்கர்யமாகையாலே பகவத்ப்ரீதியாகிற பரமப்ரயோஜநஸித்திக்காக அநுஷ்டேயமாகக்கடவது; அல்லது, விஹிதமான வாகாரத்தாலேயும் உபாயத்துக்கு யோக்யதாபாதகமான வாகாரத்தாலேயும் த்யாஜ்யமாகக்கடவது;

ஸாதநஸ்வீகாரத்துக்கு ஸ்வரக்ஷணத்திலஸக்தியும் அப்ராப்தியும் விளம்பாக்ஷமத்வமுமுடையவனிறே அதிகாரி; (உ) "ఇదంశరణమజ్ఞానామిదమేవ విజానతామ్ । ఇదంతితీర్షతాం పారమిదమానన్త్యమిచ్ఛతామ్ -இதம்ஸரணமஜ்ஞாநாமிதமேவவிஜாநதாம் இதம்திதீர்ஷதாம்பாரமிதமாநந்த்யமிச்சதாம்" (ந) "అజ్ఞసర్వజ్ఞభక్తానాంప్రపత్త్యావధికారితా-அஜ்ஞஸர்வஜ்ஞபக்தாநாம்ப்ரபத்தாவதிகாரிதா" (ச) "అవిద్యాతః அவித்யாத:" இத்யாதிகளாலே ஸ்வஸ்வரூபம் பகவதேகாக்ஷயமாகவநுஸந்திக்கையாலே ஸ்வரக்ஷணத்திலே அஜ்ஞாநஸக்திகளும், உபேயஸ்வரூப மநந்யஸாத்யமாக வநுஸந்திக்கையாலே அப்ராப்தியும், ப்ராப்யவைலக்ஷண்யாநுஸந்தாநத்தாலே விளம்பாக்ஷமத்வமுமுடையராய், அதவை அநந்யகதிகளாயிருக்கிறவர்களுக்கு இப்ப்ரபத்தியிலதிகாரமென்று சொல்லிற்றிறே. ஆகையாலேயிறே இவ்வுபாயம் ஸர்வாதிகாரமாகிறது.

ஆக, "ஸர்வதர்மாந்" என்று ஸாத்யமான ஸகலஸாதநங்களையும் த்யாஜ்யதயா உபாதாநம்பண்ணிற்றாயிற்று.

அநந்தரம், "பரித்யஜ்ய" என்று இவற்றினுடைய த்யாகப்ரகாரஞ்சொல்லுகிறது. இதுதான், "த்யஜ, த்யஜ்ய, பரித்யஜ்ய" என்று த்யாகமும் ல்யப்பும் உபபதமுமாய த்ரிவிதமாயிருக்கும்; இதில்

(க) தை-நா- (உ) மநு-கூ-அச (ந) (ச)

ல்பபந்தமான த்யாகஸப்தத்தாலே அபிமதபுருஷார்த்தஸித்திக்கு அநுரூபமாய் ஸஹாயாந்தராஸஹமான வுபாயத்தை ஸ்வீகரிக்கிற வதிகாரிக்கு தததங்கமான ஸாதநாந்தரத்யாகத்தை விதிக்கிறது.

ஸத்வித்பாநிஷ்டனுக்கு தத்வ்யதிரிக்தவித்யாந்தரத்யாகம் ஆர்த்தமாகஸித்திக்கிறாப்போலே புருஷார்த்தலாபத்துக்கு இதராநிரபேக்ஷமான வுபாயத்தை ஸ்வீகரிக்குமவனுக்கு இதரோபாயத்யாகம் அர்த்தஸித்தமாய் வருகையாலே இவ்விடத்திலே த்யாகத்துக்கு விதேயத்வமில்லையென்று சிலர் சொல்லுவர்கள்;

அதுசொல்லவொண்ணாது; விதேயமான ஸரணவரணத்துக்கு தத்வ்யதிரிக்தோபாயத்யாக வ்யதிரேகேண உதயமில்லாமையாலே அங்கியான வுபாயவரணம் விதேயமாகிறவோபாதி அங்கமானத்யாகமும் விதேயமாக வேண்டுகையாலே; ஆகையாலே (க) "ప్రక్షాళ్యపాదా వాచామేత్స్నాత్వా విధివదర్చయేత్ । స్థిత్వార్ఘ్యంభానవేదద్యాద్ధ్యాత్వాదేవంజపే న్మనుమ్-ப்ரக்ஷாள்யபாதாவாசாமேத்ஸ்நாத்வாவிதிவதர்ச்சயேத்। ஸ்தித்வார்க்க்யம்பாநவேதத்யாத்த்பாத்வாதேவம்ஜபேந்மநும்" இத்யாதிகளாலே பாதப்ரக்ஷாளநம்பண்ணி ஆசமநம்பண்ணுவான்; ஸ்நாநம்பண்ணி வித்யுக்தமானப்ரகாரத்திலே அர்ச்சிப்பான்; ஆதித்யனுக்கு நின்று அர்க்க்யப்ரதாநம்பண்ணுவான்; மந்த்ரப்ரதிபாத்யமான தேவதையைத்யாநம்பண்ணி தத்ப்ரதிபாதகமான மந்த்ரத்தை ஜபிப்பானென்று விஸிஷ்டமாக விதிக்கிறாப்போலே இங்கும் த்யாகஸ்வீகாரங்களை விஸிஷ்டமாக விதிக்கிறது.

அவ்விடத்தில் ஆர்த்த(ஸ்)மாக ஸித்தியாமையாலே விதிக்கிறது; இங்கு ஸித்தகர்மஸ்வீகாரந்தானே ததிதரகர்மத்யாகத்தைக் காட்டுகையாலே விதேயத்வமில்லையென்னில்; அது சொல்லவொண்ணாது; இவ்வதிகாரிக்கு நிஷித்ததர்மாந்வயத்தில் ப்ராயஸ்சித்தியாமோபாதி ஸாதநாந்தராந்வயத்திலும் ப்ராயஸ்சித்தியாமென்று ஸாஸ்த்ரம் சொல்லுகையாலே ஆர்த்தமாக ஸித்திக்கையன்றிக்கே விதேயமாக வேண்டுகையாலே;

எங்ஙனேயென்னில்; (உ) "ఉపాయాపాయసంయోగే నిష్ఠయాహీయతేనయా । అపాయసంప్లవేసద్యః ప్రాయశ్చిత్తంసమాచరేత్ । ఉపాయానాముపాయత్వస్వీకారేప్యేతదేవహి - உபாயாபாயஸம்யோகேநிஷ்டயாஹீயதேந

(க) (அ) லக்ஷ்மீ தந்த்-கள

யா | அபாயஸம்ப்லவேஸத்ய:ப்ராயஶ்சித்தம்ஸமாசரேத் | உபாயா நாமுபாயத்வஸ்வீகாரேப்யேததேவஹி" என்று நிஷித்தமாய் த்யாஜ்யமான ஹிம்ஸாத்யபாயாந்வயத்திலும் ஸாதநமானகர்மாத்யுபாயாந்வயத்திலும் இந்த விதததர்மநிஷ்டைக்கு ப(ங்)ங்கம்வருகையாலே அபாயாந்வயத்தில் சடக்கென ப்ராயஶ்சித்தப்பண்ணுவான்; உபாயாந்வயத்திலும் அப்படியே ப்ராயஶ்சித்தம் பண்ணுவானென்று ஶாஸ்த்ரம் சொல்லுகையாலே;

ஆகையாலே, அந்வயத்தில் ப்ராயஶ்சித்தியாக வேண்டுமெவற்றினுடைய த்யாகம், நிஷித்தமான பூதஹிம்ஸை "நஹிம்ஸ்யாத் - நஹிம்ஸ்யாத்" என்று விதேயமானவோபாதி விதேயமாக வேண்டுகையாலும், த்யாகந்தனக்குஹேது துஷ்கரத்வாதிகளிலுங்காட்டில் ஸ்வரூபவிருத்த(த்)மென்கிற ப்ரதிபத்தியே ப்ரதாநமாகையாலும், ஸாதநாந்தரங்களினுடைய த்யாகம் விதேயமாகக்கடவது.

இப்படி விஹிதமானத்யாகம் ஸாதநாந்தரங்களினுடைய ஸ்வரூபத்யாகமோ? பலத்யாகமோ? உபாயபுத்தித்யாகமோவென்னில்; கர்மயோகாதிகள் ஸ்வாபிமதபுருஷார்த்தத்துக்கு ஸாதநங்களென்கிற ப்ரதிபத்தியைவிட்டு அவற்றையநுஷ்டித்து உபாயஸ்வீகாரம்பண்ணவேண்டி விழுகையாலும், அப்போது புத்தித்யாகபூர்வகமாக அநுஷ்டிதமான கர்மயோகாதிகள் ப்ரபத்திக்கு அங்கமாகையாலே இதினுடைய ஸ்வதந்த்ரோபாயத்வஹாநி வருகையாலும், ஸர்வாதிகாரமின்றிக்கேயொழிகையாலும், தர்மஶப்தம் தர்மகதமானவுபாயத்வப்ரதிபத்திவாசகமல்லாமையாலும், (க) "ஶ்ரேயஸ்ஸாதநம் தர்ம: - ஶ்ரேயஸ்ஸாதநம்தர்ம:" என்று தர்மஶப்தத்துக்கு உதபம் ஸாதநத்வேநவாகையாலே இத்தர்மஶப்தம் ஸாதநதர்மத்தையே வசி(ஞ)க்கையாலும், "நிவர்த்தகாக்யம் தேவர்ஷிவிஜ்ஞேயம்மோக்ஷஸாதநம் -நிவர்த்தகாக்யம் தேவர்ஷிவிஜ்ஞேயம்மோக்ஷஸாதநம்" என்று நிவர்த்தகதர்மத்துக்கு மோக்ஷஸாதநத்வம் ஶாஸ்த்ரஸித்தமாகையாலே ஸாதநத்வத்யாகம் பண்ணவொண்ணாமையாலும், இவ்வுபாயம் அகிஞ்சநாதிகாரமின்றிக்கே யொழிகையாலும், (உ) "அஹமஸ்ம்யபராதாநாமாலயோऽகிஞ்சநோऽகதி: | த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி: - அஹமஸ்ம்யபராதாந

(க) பூர்வமீமாம்ஸா (உ) அஹி-ஸம்-௩௬-௩௮

மாலயோகிஞ்சநோகதிঃ । த்வமேவோபாயபூதோமேபவேதிப்ரார்த்தநாமதிঃ" என்று - நான் அபராதாநாமாலயனுகாநின்றேன்; அஹமர்த்தம் ஶேஷத்வாதிகளால் நிரூபிதமாகையன்றிக்கே அபராதத்தைவிட்டு நிரூபிக்கும்படி ஸாபராதன்; அத்யந்தபாரதந்த்ரனுகையாலே அகிஞ்சநன்; த்வதேகரக்ஷ்யமாகையாலே அகதியென்று தன்னுடைய அபராதபூயஸ்த்வத்தையும் ஆகிஞ்சந்யாநந்யகதித்வங்களையும் அநுஸந்தித்து, நீயே உபாயமாகவேணுமென்று ப்ரார்த்திக்கை ஶரணாகதியென்கிற லக்ஷணவாக்யத்தோடே விரோதிக்கையாலும், இது ஸ்வரூபப்ரதாநமன்றிக்கே விஶிஷ்டவேஷப்ரதாநமாகையாலே, இதினுடைய ஸ்வரூபாநுரூபத்வம் பக்ந(த்ந)மாகையாலும் புத்தித்யாக பக்ஷம் அர்த்தமன்று

இந்த தர்மஶப்தத்தில் உபாதாநம்பண்ணிற்று ப(ஃ)லஸங்காதித்யாகபூர்வகமாக அநுஷ்டேயமான நிவர்த்தகதர்மமாகையாலே ப்ரஸஜ்யப்ரதிஷேதத்துக்கு இடமில்லாமையாலும், தர்மஶப்தம் ப(ஃ)லவாசியல்லாமையாலும் புநருக்திப்ரஸங்கத்தாலும் பலத்யாக பக்ஷமுமர்த்தமன்று;

ஸ்வாபிலஷிதமான புருஷார்த்தத்துக்கு ஸ்வரூபாநுரூபமான ஸாதநத்தைப் பரிக்ரஹிக்கிற இவனுக்கு ஸாதநரூபதர்மத்யாகம் பண்ணுகை விருத்தமல்லாமையாலும், முமுக்ஷுத்வத்தாலே ஸ்வர்க்கஸாதநமான ஜ்யோதிஷ்டோமகர்மம் த்யாஜ்யமானவோபாதி வித்தஸாதநபரிக்ரஹத்தாலே இவையும் த்யாஜ்யமாகக்கடவதாகையாலே இங்குவிதிக்கிறது ஸாத்யஸாதநரூபதர்மங்களுடைய ஸ்வரூபத்யாகத்தை யென்றதாயிற்று.

வித்தஸாதநம் ஸகலேதரநிரபேக்ஷமாகையாலும், ஸஹாயாந்தராஸஹமாகையாலும், ஸாதநாந்தரங்கள் ஸ்வரூபவிருத்தங்களாகையாலும், ஸகலேதரஸாபேக்ஷமாகையாலும் ப்ராப்யவிஸத்ருஶங்களாகையாலும், துஷ்கரங்களாகையாலும், இவை த்யாஜ்யமாகக்கடவன.

பகவதேகரக்ஷ்யத்வேந வித்தஸ்வரூபனுப் பகவதேகஶேஷபூதனுயிருக்கையாலே ததிதரஶேஷதரவ்யாபாராஶ்ரயத்வம் விருத்த(ஃ)மாகையாலே ஸ்வரூபவிருத்தமாயிருக்கும்; வித்தஸ்வரூபனுய் ஏகரூபனுப் பரமசேதநனுய் அமோகஸங்கல்பனுகையாலே ஸஹகாரிநி

பேக்ஷமாகவிருக்கும். ரக்ஷணார்த்தமான ஸ்வவ்யாபாரதர்ஶநத்தில் ரக்ஷகனானவீஶ்வரன் ரக்ஷணநிவ்ருத்தனுமாகையாலே சணற்கயிறு கண்ட ப்ரஹ்மாஸ்த்ரம்போலே ஸஹாயாந்தராஸஹமாயிருக்கும். சிரகாலஸாத்யமாய்ஸாபாயமுமாயிருக்கையாலே துஷ்கரங்களாயிருக்கும்; ஸாம்ஸாரிக ஸகலதுரிதநிராகரணபூர்வகமாக அர்ச்சிராதிமார்க்கத்தாலே அகாலகால்யமான தேஶத்திலேபோய்ப்புக்கு நிரந்தரபகவதநுபவஜநித நிரதிஶயாநந்தஹ்ருஷ்டனாய் அந்த ஹர்ஷப்ரகர்ஷபலாத்க்ருதனாய்க்கொண்டு "ஆபரிமித தாஸ்யம்-அபரிமிததாஸ்யவதி" என்கிறபடியே அநேகவிக்ரஹபரிக்ரஹம்பண்ணி யாவதாத்மபாவி பண்ணுகிற கைங்கர்யத்துக்கு ஸ்வாநுஷ்டேயமாய் ஸ்வதந்த்ரகார்யமாயிருக்கிற கர்மாதிகள் ஸத்ருஶமல்லாமையாலே ப்ராப்யவிஸத்ருஶமாயிருக்கும்;

ஆகையாலே, (க) "ஶீதோ பவ ஹநூமத:-ஶீதோ பவ ஹநூமத:" என்று நெருப்பை நிராக்கவல்லஶக்தி யுண்டாயிருக்கச்செய்தேயும், லங்காபவநத்திலே நிருத்தை(த்தை)யான பிராட்டி, (உ) "தத்தஸ்ய ஸத்ருஶம் பவேத்" தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" என்றிருந்தாப்போலேயும், (ங) "ரக்ஷமாம் ஶரணாகதாம்-ரக்ஷமாம்ஶரணாகதாம்" என்று த்ரௌபதி க்ருஷ்ணன் பக்கலிலே ஸமர்ப்பிதஸர்வப(த்)ரையாய்க்கொண்டுதன்கையைவிட்டிருந்தாப்போலேயுமிருக்கிறதிறே ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாநபூர்த்தி பிறந்ததாவது.

ஸ்வஸ்வரூபம், (ச) "கரணாதிபாதிப:-கரணாதிபாதிப:" என்று கரணங்களோடு கரணியோடுவாசியற ஹ்ருஷீகேஶனானவனிட்ட வழக்காகையாலும், தத்தேகரக்ஷ்யத்வைக வித்தஸ்வரூபனாகையாலும் ஸாதநாந்தராநுஷ்டாநத்துக்கு யோக்யதையுமில்லை. ப்ராப்தியுமில்லை. ரக்ஷ்யத்வபாரதந்த்ர்யங்களிரண்டும் ஸ்வதஸ்ஸித்தவேஷமாகையாலே பரேச்சாதீநமாய் பரகதமான வ்யாபாரம் ரக்ஷகமாமதொழிய பரப்ரேரிதமேயாகிலும் ஸ்வகதமானவ்யாபாரம் ரக்ஷகமாகமாட்டாதபடியாயிறே யிருப்பது.

பரஸ்வரூபத்தைப் பார்த்தாலும், "அவரக்ஷணே-அவரக்ஷணே"

---

(க) ரா-ஸு-ருங-உக (உ) ரா-ஸு-கக-ங௦ (ங) பார-ஸபா-கக-சக
(ச) ஶ்வேதா-கக

என்று ரக்ஷகத்வேகநிரூபிதமான ஸ்வரூபத்தையுடையவனுகையாலே ரக்ஷகத்வம் நிருபாதிகமாகையாலும், (க)"உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம்-உபாயோபேயத்வேததிஹதவதத்வம்" என்று உபாயத்வம் ஸ்வரூபமாக வருளிச்செய்கையாலும், ஸாதநாந்தராநுஷ்டாநத்தில் ப்ராப்தியில்லையாகையாலே ஸ்வரூபத்தில் ஸாதநாந்தரங்கள்புகுராவழியில்லை.

ஆகையிறே *மயர்வறமதிநலமருளப்பெற்றவர்கள் (உ)"நோற்றநோன்பிலேன்" என்றும், (ங)"நலந்தானென்றுமிலேன் நல்லதோரறம்செய்துமிலேன்" (ச) "மற்றேரொன்றறியேன்" என்றும், இவ்வுபாயாந்தராநந்வயத்தை யருளிச்செய்தது. (ரு) "ஸஜாநேஶரணம்பரம்-நஜாநேஶரணம்பரம்" என்னக்கடவதிறே.

ஸாதநாநுஷ்டாநயோக்யமான புண்யகாலங்கள், ஸாதநமான புண்யக்ஷேத்ரவாஸம், தர்மாநுஷ்டாநத்துக்குக்காரணமான ஶரீரஸம்பந்தம், ஸாதநாநுஷ்டாநமத்யே மரணமுண்டானால் வரும் ஶரீராந்தரப்ராப்தி இவையெல்லாவற்றிலும் எனக்கு மஹத்தானபயம் நடவாநிற்கிறதென்கையாலே ஸாதநாந்தரங்கள் ஸ்வரூபஜ்ஞாநவானுக்கு பயஜநகமாயிறேயிருப்பது.

(சு) "அதபாதகபீதஸ்த்வம் ஸர்வபாவேந பாரத। விமுக்தாந்யஸமாரம்போ நாராயணபரோ பவ-அதபாதகபீதஸ்த்வம் ஸர்வபாவேநபாரத । விமுக்தாந்யஸமாரம்போ நாராயணபரோபவ" என்று ஸாதநாந்தரங்கள் பாதகமென்று பயப்பட்ட நீஸர்வப்ரகாரத்தாலும், பாரதனே! அந்யஸமாரம்பங்களைவிட்டு நாராயணபரனுவாயென்று தர்மதேவதை தர்மபுத்ரனைக்குறித்து பாதகமென்று உபதேஶிக்கையாலும், ப்ராயஶ்சித்தவிஷயமாகச் சொல்லுகையாலும் (எ) "நெறிகாட்டிநீக்குதியோ" என்று பகவத்விஷயத்துக்குப் புறம்பாகைக்கு உறுப்பாகையாலும், உத்தேஶ்யமான பகவத்பாரதந்த்ர்யத்துக்கு விரோதியாகையாலும் அதர்மமென்று போக ப்ராப்தமாயிருக்க, தர்மமென்று பேரிடுகிறது இவ்வளவுபாகம் வாராதவர்களுடைய ப்ரதிபத்தியாலேயிறே.

(க) ர-ஸ்த- (உ) தி-வாய்-ரு-எ (ங) தி-மொ-க-கூ-ச (ச) தி-மொ-க-கூ-க (ரு) ஜிதந்தே-க (சு) விஷ்ணுதர்ம-சுகூ-எக (எ) பெரியதிருவ-க

ஆகையாலே இங்குச்சொல்லுகிறது ஸித்தஸாதநவ்யதிரிக்தஸாத்ய ஸாதநங்களினுடைய ஸ்வரூபத்யாகமென்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம்.

இப்படி த்யாஜ்யமான தர்மந்தான், அநுஷ்டேயதயாஶாஸ்த்ரவிஹிதமான அர்த்தத்துக்கு வாசகமாகையாலே விஹிதாநுஷ்டாநரூபேணவும் நிஷித்தபரிஹாரரூபேணவும்சொல்லுகிற வ்யயவிததர்மத்துக்கும் வாசகமாயிருக்கிறது. இதைத்யாஜ்யதயாவ்யபதேசம்பண்ணுகிறத்தால், நிஷித்தபரிஹாரத்யாகமாகிறது நிஷித்தாநுஷ்டாநமாகையாலே நிஷித்தாநுஷ்டாநம் வக்ஷ்யமாணமான ஸ்வீகாரத்துக்கு அங்கமாகாதோவென்னில், அது ஸகலப்ரவ்ருத்திகளினுடையவும் நிவ்ருத்தியை ஸஹிக்குமதொழிய ப்ரவ்ருத்தியைஸஹியாது. அதுக்குமேலே நிஷித்தாநுஷ்டாநபலமான பாபம் ஈஶ்வரனுடைய நிக்ரஹமாகையாலே, அவனை யதிஶயிப்பிக்கிற ஸ்வரூபஸித்தியாயிருக்கிற இவ்வதிகாரிக்கு தந்நிக்ரஹகாரணமான நிஷித்தாநுஷ்டாநம் த்யாஜ்யமாகக்கடவது. புருஷார்த்தமும் பகவத்கைங்கர்யமாகையாலும் நிஷித்தம் த்யாஜ்யமாயிருக்கும். ஆக ஸ்வரூபஸாதந புருஷார்த்தங்கள் மூன்றினுடையவும் வேஷத்தைப்பார்த்தாலும் நிஷித்தாநுஷ்டாநம் த்யாஜ்யமாகக்கடவது.

இங்ஙனன்றாகில் பகவந்நிக்ரஹஹேதுவாய் நரகபதநஹேதுவான ப்ரஹ்மஹத்யாதிகள் பகவதபசாராதிகள் த்யாஜ்யமின்றியிலே யொழியும். ஆனால் நிஷித்தபரிஹாரம் தர்மஶப்தார்த்தமன்றிக்கே யொழியாதோவென்னில்; தர்மமாவது-அநுஷ்டேயதயாஶாஸ்த்ரவிஹிதமானதாகையாலே, “இதம் குரு, இதம் மாகார்ஷீ:-இதங்குரு, இதம் மாகார்ஷீ:” என்று விதிநிஷேதாத்மகமான வ்யயத்தையும் வசிக்குமாகையாலே இது சொல்லவொண்ணாது.

ஆனால் என்சொல்லிற்றாயிற்றென்னில்;-(௧)“நஹிம்ஸ்யாத்ஸர்வாபூதாநி-நஹிம்ஸ்யாத்ஸர்வாபூதாநி” (௨) “நகலஞ்ஜம் பக்ஷயேத்-நகலாஞ்ஜம் பக்ஷயேத்” இத்யாதிகளாலே ஸாமாந்யேநசொல்லுகிற நிஷித்தநிவ்ருத்திமாத்ரம் தர்மஶப்தவாச்யமன்று; ஆனாலும் ஸாதநரூபதர்மவாசகமான இத்தர்மஶப்தத்தில் உபாத்தமன்று; ஆகையாலே ஸாமாந்யேந நிஷித்தாநுஷ்டாநம் வருமென்கிற ஶங்கையில்லை.

இதில் மோக்ஷஸாதநரூபமான விதிநிஷேதாத்மகமான தர்மங்

(௧) (௨)

களைச் சொல்லுகிறது. அதினுடைய த்யாகத்தில் ஸாதநஸித்தியில்லாமையொழியவருவதொரு நிஷித்தமில்லாமையாலே தத்ஸாதநாபேக்ஷையில்லாதவனுக்கு த்யாஜ்யமாகக்குறையில்லை. நிஷித்தபரிஹாரத்திலே யந்வயிக்கிறஸ்வரக்ஷணத்திலே ப்ரவ்ருத்தனுக்கு அநவப்ரபத்த்யதிகாரஹாநிவருமாகையாலே பூர்வார்ஜிதபாபப்ராயஶ்சித்தம் த்யாஜ்யமாமோபாதி நிஷித்தபரிஹாரமும் த்யாஜ்யமாகக்கடவது.

(க) "త్రివిధాంపశ్యదేవేశకర్మణోగహనాంగతిమ్ । నిషేధవిధిశాస్త్రేభ్యస్తాం విధాఞ్చనిబోధమే । అనర్థసాధనంకించిత్కించిచ్చాప్యర్థసాధనమ్ । అనర్థపరిహారాయ కించిత్కర్మోపదిశ్యతే। త్రైరాశ్యంకర్మణామేవంవిజ్ఞేయంశాస్త్రచక్షుషా। అపాయోపేయసంజ్ఞౌతు పూర్వౌరాశీపరిత్యజేత్ । తృతీయోద్వివిధోరాశిరనర్థపరిహారకః । ప్రాయశ్చిత్తాత్మకంకించిదుత్పన్నానర్థనాశకః । తమంశంనైవకుర్వీతమనీషీపూర్వరాశివత్-

த்ரிவிதாம்பஶ்யதேவேஶகர்மணோகஹநாம்கதிம்।நிஷேதவிதிஶாஸ்த்ரேப்யஸ்தாம்விதாஞ்சநிபோதமே। அநர்த்தஸாதநம்கிஞ்சித்கிஞ்சிச்சாப்யர்த்தஸாதநம்। அநர்த்தபரிஹாராயகிஞ்சித்கர்மோபதிஶ்யதே த்ரைராஶ்யம்கர்மணாமேவம் விஜ்ஞேயம்ஶாஸ்த்ரசக்ஷுஷா। அபாயோபேயஸம்ஜ்ஞௌது பூர்வௌராஶீபரித்யஜேத்। த்ருதீயோத்விவிதோராஶிரநர்த்தபரிஹாரகঃ। ப்ராயஶ்சித்தாத்மகம்கிஞ்சிதுத்பந்நாநர்த்தநாஶக:।தமம்ஶம்நைவகுர்வீதமநீஷீபூர்வராஶிவத்" என்று நிஷேதவிதிஶாஸ்த்ரங்களில் கர்மத்தினுடையப்ரகாரம் த்ரிவிதமாயிருக்குங்காண்; அந்தப்ரகாரத்தை யென்பக்கலிலேயறியென்றுதொடங்கி அநர்த்தரூபநரகாதிகளுக்குஸாதநமாயிருக்கும்சில; போக(భోగ) மோக்ஷரூபபுருஷார்த்தஸாதநமாயிருக்கும்சில; அநர்த்தபரிஹாரஸாதநமாயிருக்கும்சில; இப்படி த்ரிவிதமாயிருக்குமென்று ஶாஸ்த்ரசக்ஷுஸ்ஸாலேயறியப்படும்; அதிலநர்த்தஸாதநமான அபராதகர்மம் ஸகலேதரோபேக்ஷகமாய்க்கொண்டு வித்தஸாதநத்தைப் பரிக்ரஹிக்கிறவனுக்கு ததங்கமாகையாலே த்யாஜ்யம்; அநர்த்தபரிஹாரதர்மத்தில் பூர்வார்ஜிதபாபபரிஹாரமான ப்ராயஶ்சித்ததர்மம் வித்ததர்மஸ்வீகாரத்துக்கு யோக்யதைகள் போகடவும் வேண்டாதபடி யிருந்தபடியே அதிகாரமாகையாலே த்யாஜ்யம். ஆகாம்யநர்த்தபரிஹாரமான தர்மம் ஶரணவரணாநந்தரம் அநர்த்தஹேதுவான தர்மங்க

(க) லக்ஷ்மீ தந்த்ரம்

ளில் புத்திபூர்வகப்ரவ்ருத்தி கூடாமையாலும், அபுத்திபூர்வகம் ஈஸ்வரஹ்ருதயத்தில் படாமையாலும் பட்டாலும், பாபவிஶேஷணமான ஸர்வஶப்தத்திலே அந்தர்ப்பவிக்கையாலும் த்யாஜ்யமென்று ஏவம்ரூபமான தர்மத்யாகப்ரகாரம் ஶாஸ்த்ரங்களிலே பரக்கச்சொல்லப்பட்டு; ஆகையாலே மோக்ஷஸாதநதயா விஹிதமான விதி நிஷேதாத்மகமான ஸகலதர்மங்களும் ஸாங்கமாக த்யாஜ்யமென்றதாயிற்று.

அதவா, ஸர்வதர்மபரித்யாகவிதாநபூர்வகஶரணவரணவிதி விஷயபூதனான இவ்வதிகாரிக்கு கர்த்தவ்யத்வேந விஹிதமாயிருப்பதொன்றில்லாமையாலும், ஶரண்யப்ரபாவத்தாலும், ஸர்வபாபவிமோசகயான விஷயத்தைப்பற்றி யிருக்குமவனுக்கு அவஶ்யமாகப் புகுந்தவை பந்தகமாகமாட்டாமையாலும், ஸாமாந்யேநவுண்டான நிஷித்தநிவ்ருத்தித்யாகத்தைச்சொல்லவுமாமென்றநுஸந்திப்பர்கள்.

இப்படி உபாயோபயோகியன்றாகிலும் ஶிஷ்யபுத்ரர்களுடைய வுஜ்ஜீவநத்துக்காகவும் லௌகிகருடைய ஸங்க்ரஹத்துக்காகவும் தந்தாமுடையவாந்ருஶம்ஸ்யத்தாலும் பூர்வாசார்யர்கள் இத்தை யநுஷ்டித்துப் போருவர்கள்; அவ்வநுஷ்டாநம் ஸ்வவிபூதிபூதரான சேதநருடைய உஜ்ஜீவநஹேதுவாகையாலே ஈஸ்வரப்ரீதிவிஷயத்வமாகிற புருஷார்த்தம் அநுஷ்டாதாவுக்கு ஸித்திக்கையாலே இவை அநுஷ்டேயங்கள்.

கர்த்த்ருகரணத்ரவ்யமந்த்ரங்கள் பேதியாதிருக்கச்செய்தேயும் நினைவுமாறுபட்டத்தாலே ஒருகர்மத்துக்கே ப்ரவர்த்தககர்மமென்றும் நிவர்த்தககர்மமென்றும் பேராகிறவோபாதி நிவர்த்தகதர்மமும் நினைவுமாறுபட்டத்தாலே ப்ராப்யத்திலே அந்வயிக்கும். ஆக, த்யஜவென்கிறத்தாலே ஸாத்யமான ஸகலஸாதநங்களினுடையவும் த்யாகத்தைச்சொல்லிற்று.

அநந்தரம் பரிவென்கிற வுபஸர்க்கத்தாலே ஸாதநதர்மம் ஸ்வரூபாநுரூபமன்றாகிலும் ஸ்வாபீஷ்டமான புருஷார்த்தம ஸ்வயத்நஸாத்யஸாதநஸாப்ய(த்ரு)மென்றுகேட்டுப்போந்தவாஸனையாலேத்யக்தமானவுபாயங்களிலும் வாஸனையநுவர்த்திக்குமாகில் அதிகாரத்துக்கு ப(ங்)க்கமாகையாலும், அபாயஸம்யோகத்திற்போலே உபா

யஸம்யோகத்திலும் ப்ராயஶ்சித்தியாமென்று கீழேசொல்லுகையா லும், வாஸனையும் ருசியும் கிடக்குமாகில் வித்தஸாதநத்தி லந்வய மின்றிக்கே யொழிகையாலும்.ஸ்வஸ்வரூபத்தையும் பந்த(பத்)த்தை யுமநுஸந்தித்தால் ஸாதநாந்தராந்வயமாகிறதுராஜமஹிஷி உஞ்சவ்ரு த்திபண்ணுதல் குடம்சுமத்தல்செய்தால் ராஜாவுக்கு அவத்யமாமோ பாதி ரக்ஷகனானவீஶ்வரனுக்கு அவத்யமாமாகையாலும் வாஸநா ருசிகளுங்கூடவிடவேண்டுகையாலே ஸவாஸநமான த்யாகத்தைச் சொல்லுகிறது.

ஸ்வரூபத்துக்கு ஸாதநாந்தரங்களின் ப்ரத்வம்ஸாபாவமன்றியி லே அத்யந்தாபாவமநுரூபமாகையாலே ப்ரதிபத்தியும் அத்யந்தாபா வமாகவேண்டுகையாலே ஸாதநாந்தரஸத்பாவப்ரதிபத்தியன்றிக்கே (க)"నజా నేశరణంపరమ్-நஜாநேஶரணம்பரம்"என்றிருக்கையே பூர்ணா திகாரம். இப்படி அத்யந்தாபாவப்ரதிபத்திவிஶிஷ்டனுகையாலேத்யா கந்தானில்லை யென்னலாம்படியிருக்கும்; ஆகையாலே இதிற்சொல் லுகிற த்யாகமாகிறது ஸாதநாந்தரங்களினுடைய அநந்வயாநுஸந் தாநமென்னுமிடம் இந்த வுபஸர்க்கத்தாலே ப்ரதிபாதிக்கிறது.

இந்தவுபாயாந்தராநந்வயமே ஸித்தோபாயாந்வயப்ரதிபத்தி யாகிற ஸ்வீகாரத்துக்கு அங்கமாகையாலே,த்யாஜ்யாநந்வயநிபந்தந மான த்யாகாபாவத்தாலே ஸ்வீகாரத்திலநந்வயம் வரவொண்ணாது; ஸித்தஸாதநம் ப்ரவ்ருத்திஸஹமல்லாதவோபாதி நிவ்ருத்திரூபக்ரி யையையும் ஸஹியாதாகையாலே; இதில் த்யாகம்விதிக்கிற ப்ரகரண த்திலே ஸாதநாந்தரங்களைப் பரக்கச்சொல்லிக்கொண்டு போருகை யே அப்ரஸ்துதமாகையாலே; அநுஷ்டாநவாக்யத்தில் ஸ்வீகாரமா த்ரமேயிறே ப்ரதிபாதிக்கப்படுகிறது.

இவைதன்னிலநுஷ்டாநத்துக்கு அஶக்தனானவன் (உ)"సోహం తేదేవదేవేశనార్చనాదౌస్తుతౌనచసామర్థ్యవాన్కృపామాత్రమనోవృత్తిఃప్రసీదమే ஸோஹம்தேதேவதேவேஶநார்ச்சநாதௌஸ்துதௌநச। ஸாமர்த் த்யவாந்க்ருபாமாத்ரமநோவ்ருத்திஃப்ரஸீதமே" என்று தேவதேவே ஶனே! தேவருடைய அர்ச்சநஸ்தவநாதிகளில் நான்ஶக்தனல்லே ன்; கேவலக்ருபையாலே ரக்ஷ்யபூதனென்று திருவுள்ளம்பற்றி ப்ர

(க) ஜிதந்தே-க (உ) வி-பு-ரு-எ-எ௦

ஸங்கமாயருளவேணும்; என்விஷயத்திலே; என்கிறபடியே நான் ஶக்தனல்லேனென்றும், அதிலே யதிகரித்தவன் (க) "ஸர்வதர்மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய-ஸர்வதர்மாம்ஶ்சஸந்த்யஜ்ய" என்கிறபடியே அப்ராப்தமென்கிறவறிவு பிறந்தவாறேவிடும். இவை நமக்கு அப்ராப்தமென்கிற ஜ்ஞாநமுடையவர்கள் (உ) "நோற்றநோன்பிலேன்" (ந) "மறநேரொன்றறியேன்" என்கிறபடியே அவை யெனக்கில்லையென்றறிவிப்பர்கள்; ஆகையாலே ஸித்தோபாயவரணம் ஸர்வாதிகாரமாகிறது.

அப்போது ல்யப்பில்சொல்லுகிற த்யாகாங்கத்வம்ஸித்திக்கும்படி யென்னென்னில், ஸர்வோபாயஶூந்யரா யிருப்பாரில்லாமையாலே யதாயோக்யம்விட்டுப் பற்றுவாரும் அநந்வயாநுஸந்தாநம் பண்ணிப் பற்றுவாருமாயிருக்கையாலே அங்கத்வஸித்திக்குக்குறையில்லை. இவற்றில் இல்லை யென்றறிவிக்கிறவர்களுக்கு வாஸநாருசிகளுங்கூட வில்லாமையாலே அவர்களே முக்க்யாதிகாரிகள். ஏவம்ரூபமான ருசிவாஸனைகளுடைய வத்யந்தாபாவம் த்யாகவாசகமான "த்யஜ" என்கிற ஶப்தத்துக்கு விஶேஷணமான பரிஶப்தத்தாலே சொல்லுகிறது. தர்மஶப்தத்திலுபஸர்க்கம் தர்மாநுஷ்டாநயோக்யதாபாதகங்களை யுபாதாநம்பண்ணுகையாலே த்யாஜ்யம் நிரவஶேஷவாசகமாகிற வோபாதி த்யாகஶப்தத்திலுபஸர்க்கமும் வாஸநாருசிகளையுங்கூட வுபாதாநம்பண்ணுகையாலே த்யாகம் நிரவஶேஷவாசகமாகிறது. வ்ரஜவில்விதிக்கிற பரைகரக்ஷ்யத்வப்ரதிபத்தியில் ஸ்வாந்வய ராஹித்யத்தைக்காட்டுகிற ஏகபதம் உபாயஸ்வரூபத்துக்கு ஔஜ்ஜ்வல்யாவஹமாகிறவோபாதி த்யஜவென்று விதிக்கிற ஸாதநாந்தரங்கள் பரைகரக்ஷ்யத்வவிரோதியென்கிற ப்ரதிபத்தி ஸ்வஸ்வரூபத்துக்கு ஔஜ்ஜ்வல்யாவஹமாயிருக்கும்.

அங்கியான ஸ்வீகாரமாகிறது நித்யஸித்தரக்ஷ்யத்வாந்வய ப்ரதிபத்தியினுடைய வநுஸந்தாநமாகையாலே உபாயநைரபேக்ஷ்ய விரோதியில்லாத வோபாதி அங்கமானத்யாகமும் நித்யஸித்தஸாதநாந்தராநந்வய ப்ரதிபத்தியாகையாலே நைரபேக்ஷ்யவிரோதியாகாது. ப்ரக்ருத்யர்த்தாந்விதமான வுகாரம் ஸ்வரூபத்திலநந்யார்ஹதை

---

(க) ஶரணாகதிகத்யம் (உ) தி-வாய்-டு எ- (ந) தி-மொ-க-கூ-க

யைக்காட்டும். தாத்வர்த்தாந்விதமான வகாரம் உபாயத்திநுடைய அநந்யார்ஹதையைக் காட்டும்.

ஸ்வரூபத்தில் (க) "மானிடவர்க்கென்று பேச்சுப்படில்வாழகில்லேன்" என்றும், (உ) "மற்றொருவர்க்கென்னைப் பேசலொட்டேன் மாலிருஞ்சோலையெம்மாயற்கல்லால்" என்றும் அந்யஸ்பர்ஶம் நாசகரமாயிருக்குமோபாதி, உபாயத்திலும், (ங) "களைவாய் துன்பம் களையாதொழிவாய்களைகண்மற்றிலேன்" (ச) "உன்னாலல்லால் யாவராலுமொன்றும்குறைவேண்டேன்" என்றும் சொல்லுகிறபடியே இதரஸாதநஸ்பர்ஶமும் ஸ்வகியஸ்வீகாரமும் நாசகரமாயிருக்கையாலே ஸாதநாந்தரங்களினுடைய அத்யந்தாபாவப்ரதிபத்தி இந்தப் பரிஶப்தத்தாலே சொல்லிற்றாயிற்று.

உபாயாபாயங்களினுடைய ஸம்யோகத்தில் ப்ராயஶ்சித்தியாமென்று கீழேசொல்லிற்று. அவ்விடத்தில் அவனுக்குச்சொல்லுகிற ப்ராயஶ்சித்தமாவது-(ரு) "అపిచేత్పాతకంకించిద్యోగీకుర్యాత్ప్రమాదతః। యోగమేవనిషేవేతనాన్యంయజ్ఞంసమారభేత్ - அபிசேத்பாதகம்கிஞ்சித்யோகீகுர்யாத்ப்ரமாததஃ। யோகமேவநிஷேவேதநாந்யம்யஜ்ஞம்ஸமாரபேத்" என்று யோகாப்யாஸநிரதனானவன் ப்ரமாதத்தாலேயேதேனும் பாபம்பண்ணினால் யோகத்தையே ஸேவிப்பான்; வேறொருயஜ்ஞமநுஷ்டிப்பானல்லனென்று யோகிக்கு ப்ராமாதிகபாபஸ்பர்ஶத்தில் யோகாப்யாஸந்தானே ப்ராயஶ்சித்தமாமாபோலே, "అపాయసమ్ప్లవేసద్యః ప్రాయశ్చిత్తంసమాచరేత్ । ప్రాయశ్చిత్తిరియంసాత్రయత్పునశ్శరణాగ్రజేత్ । ఉపాయానాముపాయత్వస్వీకారేప్యేతదేవహి- அபாயஸம்ப்லவேஸத்யஃப்ராயஶ்சித்தம்ஸமாசரேத்। ப்ராயஶ்சித்திரியம்ஸாத்ரயத்புநஶ்ஶரணம்வ்ரஜேத்। உபாயாநாமுபாயத்வஸ்வீகாரேப்யேததேவஹி" என்று புநஃப்ரபத்தியென்னுமிடம் சொல்லிற்று.

(சு) "కృతేపాపేనుతాపోవైయస్యపుంసఃప్రజాయతే। ప్రాయశ్చిత్తంతుతస్యైకం హరిసంస్మరణంపరమ్-க்ருதேபாபேநுதாபோவையஸ்யபும்ஸஃப்ரஜாயதே।

(க) நா-தி-க-ரு (உ) பெரி-தி-ரு-சரு (ங) தி-வாய்-ரு-அ-அ
(ச) தி-வாய்-ரு-அ-உ (ரு) லக்ஷ்மீ-தம்-கள (சு) வி-பு-உ-சு-சம

ப்ராயஶ்சித்தந்துதஸ்யைகம்ஹரிஸம்ஸ்மரணம்பரம்" என்று பாபம் பண்ணினவளவிலே யாவனொருபுருஷனுக்கு அநுதாபம்பிறக்கிறது; அவனுக்கு ப்ராயஶ்சித்தம் ஹரிஶப்தவாச்யனான ஸர்வேஶ்வரனே அந்தப் பாபங்களைப்போக்குவனென்று நினைக்கையென்றும், (க) "[Grantha] -க்ருஷ்ணாநுஸ்மரணம்பரம்" என்று பகவத்ப்ரகாரத்வாநுஸந்தாநமே ஸர்வப்ராயஶ்சித்தங்களிலும் அதிகமான ப்ராயஶ்சித்தமென்று ப்ரதேஶாந்தரங்களிலும் சொல்லிற்று.

அவ்விடத்தில் புநःப்ரபதநமாகிறது - புநःப்ரயோகமின்றிக்கே பூர்வக்ருதப்ரபத்தியினுடைய ஸர்வாநிஷ்டநிவாரகத்வரூபமான வ்யாபாரத்தை யநுஸந்தித்து வ்யவஸிதனாகை. ஆனபடியாலே (உ) "[Grantha] -ஸக்ருதேவஹிஶாஸ்த்ரார்த்தःக்ருதः" (ங) "[Grantha] -ஸக்ருதேவப்ரபந்நாய" இத்யாதிகளிற் சொல்லுகிற ஸக்ருத்ப்ரபத்தியோடு விரோதியாது.

அநந்தரம் "த்யஜ்ய" என்கிற ல்யப்பாலே இத்யாகம் மேற்சொல்லுகிற வுபாயஸ்வீகாரத்துக்கு அங்கமானவன்று கர்த்தவ்யம்; அல்லாதபோது கர்த்தவ்யமன்றென்கிறது. உபாயாந்தரங்களைவிட்டு ஸித்தோபாயத்தைப்பற்றுதேயிருக்குமாகில் உபயப்ரஷ்டனாய் விநாஶத்தோடே தலைக்கட்டுமேத்தனையிறே. ஆகையாலே, த்யாகம் மேலிட்டு நரகம் வஸ்தவ்யபூமியாதல், த்யாகபூர்வகமாக ஸ்வீக்ருதமானவுபாயம் மேலிட்டு பரமபதம் என்கிறமுறிப்படிச் செல்லுதல் செய்யும்படியிறே யென்னிலையென்று ஜீயரருளிச்செய்தது. ஆக த்யாகம் ஸித்தோபாயவரணம்பண்ணுமதிகாரியைப் பற்றவாகையாலே த்யாகவிதிக்கு மநுஷ்டாநவிதிக்கும் விரோதமில்லை; ஆக, ல்யப்பாலே இங்கு விதேயமானத்யாகம் வ்ரஜவென்று விதிக்கிற ஸ்வீகாரத்துக்கு அங்கமென்றதாயிற்று.

நனு, இந்ததர்மபரித்யாகம் விதேயமாகில் இதில் மேற்சொல்லுகிற ஶோகநிவ்ருத்திகூடாது; எங்ஙனேயென்னில், உபாயாந்தரங்களை ஸ்வரூபவிருத்தமென்று விட்டவனுக்கு ஶோகமில்லாமையாலே "மாஶுசः" என்கிற நிஷேதவிதி கூடாமையாலே, அதுக்குமேலே உபாயாந்தரங்களை துஷ்கரத்வாதிபயத்தாலே விட்டுத் தன்

(க) வி-பு-உ (உ) லக்ஷ்மீ-த-கஎ (ங) ரா-யு-கஅ-ஙங

னுடைய புருஷார்த்தலாபத்துக்கு ஒருபாயமில்லாமையாலே ஶோகித்தவனுக்கு இந்தவுபாயஸாத்யத்வம் முன்புசொன்ன வுபாயங்களைத் தானேவிடுகையாலே யுண்டாகையாலே த்யாகத்துக்கு விதேயத்வமில்லை யாகையாலும், அந்தவுபாயத்யாகந்தான் துஷ்கரத்வாதி ப்ரதிபத்தியாலேயாகையாலும், விளம்பாக்ஷமனான புருஷனுக்கு பஹுதரஜந்மஸாத்யமான வுபாயாந்தரங்களில் துஷ்கரத்வாதி ப்ரதிபத்தி பிறக்கையாலும், புருஷார்த்தவைலக்ஷண்யஜ்ஞாநத்தாலே தத்ப்ராப்தியிலே அதித்வரை நடக்கையாலே அதில்விளம்பத்தை ஸஹியாமல் சிரகாலஸாத்யமான வுபாயாந்தரங்களைவிட்டு அவிளம்ப்ய பலப்ரதமாயிருப்பதொரு வுபாயம் காணாமையாலே ஶோகிக்கிறவனைக்குறித்து ஸ்வதஃப்ராப்தமான த்யாகத்தையநுவதித்து ஸித்தஸாதநத்தை விதிக்கிறதாகையாலும், விஹிதமானவுபாயத்தை விடச்சொல்லிவிதிக்கில் ஶாஸ்த்ரவையர்த்த்யம் வருகையாலும், ஒருபலத்துக்கு குருவாயும் லகுவாயுமிருப்பதிரண்டு உபாயத்தைவிதித்தால் லகூபாயமுண்டாயிருக்க குருபாயத்திலிழிவாரில்லாமையாலே லகூபாயமான ப்ரபத்த்யுபாயஸந்நிதியில் குருபாயமானபக்த்யுபாயத்துக்கு அநுஷ்டாநமில்லாமையால் வருகிற வப்ராமாண்யத்தாலும், குருபாயஸந்நிதியில் லகூபாயத்துக்கு உதயமில்லாமையாலே இந்தத்யாகம் விதேயமன்று; ஸ்வயமேவத்யக்தோபாயனானவனுக்கு அந்தத்யாகத்தையநுவதித்து ஶரணவரணமாத்ரம் விதிக்கிறதென்று சிலர்சொல்லுவர்கள்.

அது சொல்லவொண்ணாது; அத்யந்தபாரதந்த்ரமாய் பகவதேகாக்ஷ்யமான ஸ்வரூபத்துக்கு அநுரூபமல்லாத ஸாதநாந்தரதர்ஶநத்தாலே ஶோகித்தவனைக்குறித்து அவற்றினுடைய த்யாகபூர்வகமாக வநுரூபோபாயத்தை விதித்து ஶோகியாதே கொள்ளென்கையாலே ஶோகநிவ்ருத்தவிதி கூடாதென்கிறவிடம் அர்த்தமல்லாமையாலும், உபாயாந்தரங்களை துஷ்கரத்வாதிபயத்தாலே விட்டவனுக்கு அதுராஜஸ்த்யாகம்; அவனுக்கு த்யாகபலமான வாகிஞ்சந்யஸித்தியுமில்லை யென்னுமிடம், (க)"దుఃఖమిత్యేవయత్కర్మ కాయక్లేశభయాత్త్యజేత్ । సకృత్వారాజసంత్యాగం నైవత్యాగఫలంలభేత్"-துக்கமித்யேவயத்கர்மகா

(க) கீ-௧௮-௮

பக்லேப்பயாத்த்யஜேத் ஸக்ருத்வா ராஜஸத்பாகம் நைவத்யாகபலம் லபேத்" என்று கீழேசொல்லி துஷ்கரத்வாதி பயநிபந்தநமாக வருகிறத்யாகத்தை நிஷேதிக்கையாலும், துஷ்கரத்வாதி பயநிபந்தநமான த்யாகத்தில் ஸக்யாம்ஸாநுஷ்டாநத்தில் ஸர்வஸப்தத்துக்கு நைரர்த்த்யம் வருகையாலும், பகவதேகரக்ஷ்யமான ஸ்வரூபத்துக்கு ரக்ஷகவ்யாபாரம் ரக்ஷகமாமதொழிய ரக்ஷ்யவ்யாபாரம் ரக்ஷகமாகமாட்டாமையாலும், ஸ்வரக்ஷணவ்யாபாரம் பாதகாதிகளோபாதி ப்ரதிபந்தகமாகையாலும், ஸுகரமுமாய் அநுரூபமுமாய் நிரபாயமுமான ஸாதநத்தினுடைய ஸ்வீகாரத்துக்காக தத்விருத்தமாய் துஷ்கரமுமாய் ஸாபாயமுமாய் ஸ்வரூபாநநுரூபமாயிருக்கிற ஸாதநாந்தரங்களைவிடச் சொன்னவித்தால் ஸாஸ்த்ரவையர்த்த்யம் வருமென்னவொண்ணாதாகையாலும், குணாநுகுணமாக விஹிதமான ஸ்யேநவித்யாதிகள் ஸாஸ்த்ரவிஸ்வாஸம்பிறந்து யதாவான புருஷார்த்ததத்ஸாதநங்களிலே ருசிபிறந்தவாறே த்யாஜ்யமாக விதிக்கிறாப்போலே ஜ்ஞாத்ருத்வகர்த்த்ருத்வபோக்த்ருத்வாதிகளே ஆத்மாவுக்கு ஸ்வரூபமென்றநுஸந்தித்தவனைக்குறித்து விஹிதமான ஸாதநாந்தரங்கள் அநந்யார்ஹஸேஷத்வாநந்யஸரணத்வாநந்யபோகத்வங்களாகிற ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞாநவானைக்குறித்து த்யாஜ்யமாகவிதிக்க ப்ராப்தமாகையாலும், பரமபுருஷார்த்தலக்ஷணமான புருஷார்த்தத்தை யறிந்திருக்கச்செய்தேயும் ஐஸ்வர்யாதிபுருஷார்த்தங்களிலே அபிலாஷை நடக்கக்காண்கையாலும், ஸாதநத்திலும் ஒருவன் ரத்நபரீக்ஷைபண்ணி ஜீவிக்கக்காணநிற்கச்செய்தேயும் ஒருவன் க்ருஷிபண்ணி ஜீவிக்கக்காண்கையாலும், பூர்வபூர்வகர்மாநுகுணமாக ஸுகரதுஷ்கரமார்க்கங்களிலே ருசிபிறக்குமாகையாலும் ஸாத்யஸாதநங்கள் ஆயாஸாதிகளாலே துஷ்கரமாகிறவோபாதி ஸித்தஸாதநத்திலும் விஸ்வாஸகௌரவத்திலருமையாலே துஷ்கரத்வமுண்டாகையாலும், லகூபாயஸந்நிதியில் குரூபாயத்திலிழிவாரில்லை யென்கிறது தூஷணமல்லாமையாலும், ஆகையாலே ஸகலஸாதநங்களையும் ஸஹியாதேயிருப்பதாய் ஸ்வயம்நிரபேக்ஷமான ஸித்தஸாதநஸ்வீகாரத்தை இதில் விதிக்கிறதாகையாலே ததங்கமான த்யாகம் விதேயமென்கிறது.

ஆக, பதத்வயத்தாலும் த்யஜ்யமான தர்மங்களையும், த்யாகப்ர காரத்தையும், த்யாகம்-ஸ்வீகாரத்துக்கு அங்கமென்னுமிடத்தை யும் சொல்லிற்று.

அநந்தரம் த்யாகாங்கமான ஸ்வீகாரத்தைச்சொல்லக்கடவ தாய்க்கொண்டு ஸ்வீகார்யஸ்வரூபத்தை "மாம்" என்கிறபதத்தாலே சொல்லுகிறது. இவ்விடத்தில் பதர்கூட்டைவிட்டு மணிபர்வதத் தை யண்டைகொள்ளென்பாரைப்போலேபிறே இந்தவிதித்வயமு மென்று நம்பிள்ளையருளிச்செய்வரென்று ஆச்சான்பிள்ளை யருளிச் செய்வர். ஸாதநாந்தரங்கள் ஸாபாயங்களாய் அநேகங்களாய் அசே தநங்களாயிருக்கையாலே பதர்கூட்டம்போலேயென்றது. இவன் ஸித்தஸ்வரூபனாய் ஒருவனாய் பரமசேதநனாயிருக்கையாலேமணிபர் வதம்போலே யென்கிறது.

"மாம்" என்று த்வத்ஸாரத்யேஸ்திதனான வென்னையென்ற படி. இத்தால் நீவிமுகனானவன்றும் அந்தர்யாமியாய்நின்று ஸத்தை யைநோக்கியும், கரணகளேபரவிதுரனாய் அசித(த்)விசேஷிதனான வன்றும் தன்பக்கலிலே யேறிட்டுக்கொண்டு நோக்கியும், பின்பு நீ அபி(ஃ)முகனாயுஜ்ஜீவிக்கக்கூடுமோவென்று கரணகளேபரப்ரதாநம் பண்ணியும், பின்பு அவற்றைக்கொண்டு ப்ரவ்ருத்திகள் செய்கைக் காக அநுப்ரவேஶித்து, தன்னைப்பெறுகைக்கு உடலாயிருப்பதொ ரு ஜ்ஞாநவிசேஷமுண்டாமோவென்னும் நசையாலே வேதங்களை யும்வைதிகரையும் ப்ரவர்த்திப்பித்து,(க)"ధృతినియమనరక్షావిచక్షణైశ్శాస్త్ర దానప్రభృతిభిరచికిత్స్యైః ప్రాణినః ప్రేక్ష్య భూయః సురమనుజతిరశ్చాం లీలయా తుల్య ధర్మా త్వమవతరసి దేవోపేన్ద్ర సన్ స్వయమాత్మా - த்ருதிநியமநரக்ஷாவிசக்ஷணைஶ் ஶாஸ்த்ரதாநப்ரப்ருதிபிரசிகித்ஸ்யாந்ப்ராணிந:ப்ரேக்ஷ்யபூய:ஸுரம நுஜதிரஶ்சாம்லீலயா துல்யதர்மாத்வமவதரஸிதேவோபேந்த்ரஸந் ஸ்வயமாத்மா" என்றிப்படியே த(த்)ரித்துநியமித்துரக்ஷணாவகாசமான ரக்ஷாபேக்ஷை பார்த்திருந்து ஶாஸ்த்ரப்ரதாநம்பண்ணிசெய்துபோ ந்த விவேகாகாரவிசேஷங்களாலே ரக்ஷணாவகாஶம்பண்ணிக் கொடாமையாலே ரக்ஷணத்திலொரு சிகித்ஸையில்லாத ப்ராணிக ளைப்பார்த்து தேவதிர்யகாதியோநிகளிலே அவர்களோடு ஸமாந தர்மாவாய்க்கொண்டு அவதரியாநிற்புதி ; ஜநநமரணாதியோக்யமின்

(க) ர.ஸ்த.உ.௪அ

திக்கே நித்யனுயிருக்கச்செய்தேயுமென்கிறபடியே, ஓலைப்புறத்தில் செல்லாதவிடத்தை யெடுத்துவிட்டு நடத்துவாரைப்போலே ராம க்ருஷ்ணுத்யவதாரங்களைப்பண்ணுவதாய் இப்படி எதிர்சூழல்புக்குத் திரிகிற தன்வ்யாபாராதிகளைக் காட்டுகிறுன்.

"மாம்"என்று தன்வ்யாமோஹத்தைக் காட்டுகிறுனென்று நம்பிள்ளையருளிச்செய்வர்; அதாவது - (க) "𑌵𑍈𑌕𑍁𑌣𑍍𑌠𑍇 𑌤𑍁 𑌪𑌰𑍇 𑌲𑍋𑌕𑍇-வைகுண்டேதுபரேலோகே" இத்யாதிகளிற்படியே "𑌭𑌕𑍍𑌤𑍈𑌰𑍍𑌭𑌾𑌗𑌵𑌤𑍈𑌸𑍍𑌸𑌹-பக்தைர்ப்பாகவதைஸ்ஸஹ" என்கிற வைகுந்தத்தமரரும் முனிவருமான வயர்வறுமமரர்களோடு ஸ்ரீபூமி நீளைகளோடுமெழுந்தருளியிருந்து நிரந்தரபூர்ணுநுபவம் நடக்கச்செய்தேயும் லீலாவிபூதியிலுள்ளாருடைய விழவே திருவுள்ளத்திற்பட்டு (௨) "𑌸 𑌏𑌕𑌾𑌕𑍀 𑌨 𑌰𑌮𑍇𑌤-ஸஏகாகீநரமேத" என்று அவ்வநுபவம் உண்டதுருக்காட்டாதே திருவுள்ளம்புண்பட்டு இவர்களையும் அவ்வநுபவத்திலே மூட்டலாமோவென்னும் நசையாலே அவதரித்துத் தாழநின்று அவன்கால் தலையிலேபடநின்று வ்யாபரித்த தன்வ்யாமோஹமெல்லாம் தோற்றும்படியிருக்கை.

"நீ உனக்குபோக்யமான ஶப்தாதிவிஷயங்களை புஜிக்கையாலே உன்னுடம்பில் புசரைப்பார்; எனக்கு போக்யமான வுன்னையநுபவிக்கப்பெறுமையாலே என்னுடம்பில் வெளுப்பைப்பார்" என்று சட்டையைவிழவிட்டுக் காட்டுகிறுனென்று எம்பார் அருளிச்செய்வர். போக்தாவுக்குத் தன்போக்யஜாதத்திலே யொன்றுகுறையிலும் குறைவாயிருக்குமிறே; (௩)"𑌅𑌹𑌮𑌨𑍍𑌨𑌮𑍍-அஹமந்நம்"என்று ஆத்மவஸ்து அத்தலைக்கு போக்யமாயிறேயிருப்பது.

ஆக, "மாம்" என்று பரவ்யூஹாதிகளையும் விபவாந்தரங்களையும் இவ்வவதாரந்தன்னில் நவநீதசௌர்யாத்யபதாநாந்தரங்களையும் வ்யாவர்த்தித்து, உனக்கு ஸாரதியாய் உனக்கு இழிதொழில் செய்து நிற்கிற வென்னையென்று, (௪) "பார்த்தன்செல்வத்தேரேறுசாரதி" என்றும், (௫)"கோல்கையிற்கொண்டு பார்த்தன்றன்தேர் முன்னின்றுன்" என்றும், (௬) "தேர்மன்னர்க்காயன்று தேரூர்ந்

(க) வாயுபுராணம் (௨) மஹோபநிஷத் (௩) தை-ப்ருகு
(௪) தி-மொ-௨-௧௦-௮ (௫) தி-மொ-௨-௩-௧ (௬) தி-மொ-௪௧-௫-௮

தான்'' என்றும் சொல்லுகிற *தேசமறியவோர்சாரதியான நிலையைக்காட்டுகிறது.

''யாம்'' என்று ஆஶ்ரயணீயமான வ்யக்தியைச்சொல்லுகையாலே ஆஶ்ரயணோபயோகியாக(க)''நிகரில்புகழாயுலகம்மூன்றுடையாய் என்னையாள்வானே திருவேங்கடத்தானே''என்று ஆம்முதல்வராலே அநுஸந்திக்கப்பட்டு அநுஷ்டாநவாக்யத்தில் நாராயணபதத்திலே யநுஸந்தேயமான வாத்ஸல்யாதிகுணசதுஷ்டயங்களும் அநுஸந்தேயங்கள்.

வாத்ஸல்யமாவது - அன்றீன்றகன்றின்பக்கல்தாய்பண்ணும் வ்யாமோஹம்; அதாவது-சுவடுபட்டதரையில் புல்லையும் காற்கடைகொள்ளும்தேநுவானது-தன்கடையில்நின்றும் புறப்பட்டகன்றினுடைய தோஷத்தைத்தன்பேறாகநக்கித் தன்முலைப்பாலாலே அத்தை த(ர)ரிப்பிக்குமாபோலே, ஆஶ்ரிதகதமான தோஷமே போக்யமாக வங்கீகரித்து (க) ''பாலேபோல்சீர்'' என்கிற தன் கல்யாணகுணங்களாலே அவர்களை ரக்ஷிக்கை. ஸ்வாமித்வமாவது-ஆஶ்ரிதருடைய பேறிழவிலுண்டான ஸுகதுக்கங்கள் அவர்களுக்கன்றிக்கேயாம்படி அவர்களையுடையனாகை. ஸௌஶீல்யமாவது-(உ) ''ஸவாஂப்ய௱ஸ:-அவாக்யநாதர:'' என்கிறபடியே பெரியமேன்மையுடையனாய் (ங) ''அவனெவ்விடத்தான்யானார்'' என்னும்படியிருக்கிறவன் க்ஷுத்ரஸம்ஸாரியான சேதநனோடே அவன் சிறுமையாதல் தன்பெருமையாதல் தன்நெஞ்சிற்படாதபடி புரையறக்கலக்கை. ஸௌலப்யமாவது-(ச) ''கட்கரியபிரமன் சிவனிந்திரனென்றிவர்க்குக்கட்கரியகண்ணன்'' என்கிறபடியே அதீந்த்ரியனான தான் எல்லாருடையகண்ணுக்கு மிலக்காய்க்கொண்டு ஸுலபனாய்நிற்கை.

(ரு)''நயோத்ஸ்யே-நயோத்ஸ்யாமி''என்று தர்மத்திலே அதர்மபுத்திபண்ணி யுத்தத்தில்நின்றும் நிவ்ருத்தனானவர்ஜுனன் தோஷம்பாராமல் மேல்விழுந்து தன்பேறாக அவனுக்கு அத்யாத்மோபதேஶம் பண்ணுகையாலே வாத்ஸல்யம்காணலாம்.

(க) பெரியதிருவ-ருஅ (உ) சாந்தோ-ங-கச-உ (ங) தி-வாய்-ரு-க-எ
(ச) தி-வாய்-எ-எ-கக (ரு) கீ-உ-க

அர்ஜுநனுக்கு இழிதொழில்செய்து தான்ரதியாகாமல் ஸாரதியாய் அப்ரதாநனாய் நிற்கிறதசையிலே தன் ஸர்வசரீரித்வ ஸர்வ நிர்வாஹகத்வாதிகளை யுபதேசியாநின்றுகொண்டு (க) "தேவர்தலை மன்னர்தாமே" என்றும் (உ) "பார்த்தன்றன்தேரையூருந்தேவன்" என்றும் சொல்லும்படியாயிருக்கிற வைபவரூப்யத்தைக் காட்டுகையாலே ஸ்வாமித்வம் காணலாம்.

அதிசயிதஜ்ஞாநரான ஸூரிகளுக்கு மெட்டவரியனாயிருக்கிறதானே, (ங) "హేకృష్ణ హేయాదవ హేసఖేతి-ஹேக்ருஷ்ண ஹேயாதவ ஹேஸகேதி" (ச) "సేనయోరుభయోర్మధ్యే రథంస్థాపయమేచ్యుత-ஸேநயோருபயோர்மத்யேரதம்ஸ்தாபயமேச்யுத" என்று வாராய்தோழனே! க்ருஷ்ணனே யாதவனே யென்றழைத்து, "தேரைநடத்து; புரவியைவிட்டுக்குளிப்பாட்டு" என்னும்படி "பார்த்தர்க்காய், ஐவர்க்காய், தேர்மன்னர்க்காய்" என்கிறபடியே அவர்களுக்குக்கையாளாய்க்கொண்டு * பாங்காக முன்னைவரொடன் பளவிநிற்கையாலே ஸௌசீல்யம்காணலாம்.

(ரு) "నతస్య ప్రతిష్ఠతిరూపమస్యనచక్షుసాపశ్యతికశ్చనైనమ్-நஸந்த்ருஸேதிஷ்டதிரூபமஸ்யநசக்ஷுஷாபஸ்யதிகஸ்சநைநம்" (சு) "నమాంశక్యసేద్రష్టుమనేనైవస్వచక్షుషా-நமாம்ஸசக்ஷுஷாப்ரேக்ஷிதேதம்" (எ) "యస్యావతారరూపాణిసమర్చన్తిదివౌకసః-யஸ்யாவதாரரூபாணிஸமர்ச்சந்திதிவெளகஸ:" (அ) "అపశ్యన్తఃపరంరూపమ్-அபஸ்யந்த:பரம்ரூபம்" என்றும், (கூ) "நேரேகடிக்கமலத்துள்ளிருந்தும்காண்கிலான்" (க0) "கார்செறிந்தகண்டத்தானெண்கண்ணன்காணான்" (கக) "நீறுடிதான்காணமாட்டாத" என்று மித்யாதிகளாலே சொல்லுகிறபடியே ப்ரஹ்மாதிகளுக்கும் ஸ்வயத்நத்தால்காண நிலமின்றிக்கேயிருக்கிற விக்ரஹத்தை (கஉ) "దివ్యందదామితేచక్షుః పశ్యమేయోగమైశ్వరమ్- திவ்யந்ததாமிதேசக்ஷு:பஸ்யமேயோகமைஸ்வரம்" என்று அர்ஜுநனுக்கு திவ்யசக்ஷுஸ்ஸைக்கொடுத்து

---

(க) சு-திருவ-கசு (உ) தி-மொ-சு டு-கூ (ங) கீ-கக-சக
(ச) கீ-க-உக (ரு) ஸ்த-நா- (சு) ருக்வேத-
(எ) வி-பு (அ) (கூ) க-திருவ-டுசு
(க0) சு-திருவ-எங (கக) சு-திருவ உஎ (கஉ) கீ-கக.அ

அநுபவிப்பித்து, அத்ருஷ்டபூர்வமாய் அத்பத்புதமாயிருந்துள்ள அந்தவிஸ்வரூபதர்ஶநத்தாலேவந்த ஹர்ஷபயங்களாலேவ்யாகுலனுனவவன்றனக்கே, (க) "[illegible]-கிரீடிநங்கதிநஞ்சக்ரஹஸ்தமிச்சாமித்வாத்ரஷ்டுமஹம்ததைவ। தேநைவரூபேண சதுர்ப்புஜேந ஸஹஸ்ரபாஹோபவவிஶ்வமூர்த்தே" என்று பரிசரிசுபூர்வமான ஶுபாஶ்ரயவிக்ரஹத்தையே காணவேணுமென்று ப்ரார்த்தித்தவளவிலே, (உ) "[illegible]-வ்யபேதபீ:ப்ரீதமநா: புநஸ்த்வம்ததேவமேரூபமிதம்ப்ரபஶ்ய" என்று ஸ்வாஸாதாரணவிக்ரஹத்தைக் காட்டியும், (ங) "[illegible]-தத்விஷ்ணோ:பரமம்பதம்ஸதாபஶ்யந்திஸூரய:" என்று நித்யஸூரிகள்கண்டு ஸத்தைபெற்றும், (ச) "[illegible]-பர்த்தாரம்பரிஷஸ்வஜே" என்று பிராட்டிமாரணைந்துஸத்தைபெற்றும் போருகிற திவ்யவிக்ரஹத்தை அர்ஜுநனுக்குக்கடாக்கியொதுங்குகைக்கும் துர்யோதநாதிகளிலக்காகவதிலே யெய்யவும்பண்ணிநிற்கையாலே ஸௌலப்யம் காணலாம்.

இந்த வாத்ஸல்யாதிகளிலுங்காட்டில் கீழ்ச்சொன்னவ்யாமோஹத்துணமே ஆஶ்ரிதருக்கு உத்தாரகமாவது; (ரு) "வாரிக்கொண்டுன்னைவிழுங்குவன்காணிலென்று ஆர்வுற்றவென்னையொழியவென்னில் முன்னம்பாரித்துத் தானென்னைமுற்றப்பருகினான்" என்கிறபடியே ஒருசேதநனைப்பெற்றானாகில் உஜ்ஜீவித்தல், இல்லையாகில் நாவிலும் பல்லிலும் நீரற்றுக்கிடக்கும்படியான வ்யாமோஹத்தோடேயென்னைமுற்றப்பருகினானென்றாரிறே; (சு) "உய்வுபாயம்மற்றின்மைதேறி" என்று-தம்முடைய ஆத்மஸத்தையை அவனுக்கலங்காரமான திருவாபரணம் திருமாலைகளாகவும், இவருடைய பக்தி மாத்ரமே திருப்பீதாம்பரம்முதலானவலங்காரங்களாகவும்கொள்ளும்படியான வ்யாமோஹமல்லது உஜ்ஜீவநோபாயமில்லை யென்றாரிறே.

---

(க) கீ-கக-சகூ. (உ) கீ-கக-சகூ. (ங) ஸாம-உத்தர
(ச) நா-ஆ-ரு0-ருகூ. (ரு) தி-வாய்-கூ-கூ க0. (சு) தி-வாய்-ச ரு-கக

நாட்டில் ஶரண்யரிற்காட்டில் இவனுக்கு விஶேஷம் நிருபாதிகரக்ஷகத்வமும் இந்தவ்யாமோஹகுணமுமென்று ஆச்சான்பிள்ளை வார்த்தை.

இவ்விடத்தில் "மாம்" என்கிற வபரோக்ஷநிர்த்தேஶத்தாலே ப்ரகாஶிதமாய், கீழ்ச்சொன்ன ஸௌலப்யகுணத்துக்கு விஷயமாய், ஆஶ்ரயணோபயோகிதயாத்வயத்திலே(ஃ)சரணஶப்தத்தாலேசொல்லப்பட்ட விக்ரஹவத்தையும் சொல்லுகிறது.

அதாவது-ஸேநாதூளிதூஸரிதமாய் அலையெறிகிறகொத்தார் கருங்குழலும், ஸ்வேதபிந்துஸ்தபகிதமான கோளரிமுழைவாண்முகமும், ஆஶ்ரிதவிரோதிதர்ஶநத்தாலே சீறிச்சிவந்து சிதறவலர்ந்ததாமரைத் தடாகம்போலே கண்டவிடமெங்கும் அலையெறிகிறதிருக்கண்களும், காளமேகநிபஶ்யாமமாயிருண்டுகுளிர்ந்ததிருமேனியும், குருமாமணிப்பூண்குலாவித்திகழும் திருமார்பணிந்தவனமாலையும் அதுக்குப் பரபாக(ஃ)மாம்படி சாற்றின வந்திபோன்ற நிறத்தாடையும், தூக்கினவுளவுகோலும், ஜ்ஞாநமுத்ரையோடேகூடினவணிமிகுதாமரைக்கையிலேகோத்த சிறுவாய்க்கயிறுமாய் நிற்கிறநிலையைச்காட்டுகையாலே விலக்ஷணவிக்ரஹயோகமும் தோற்றுகிறது.

"மாம்" என்ற விலக்ஷணவிக்ரஹோபேதமாய் வாத்ஸல்யாதிகுணவிஶிஷ்டவஸ்துவைச்சொல்லுகையாலே, (க) "ஶ்ரீவத்ஸவக்ஷா:-ஶ்ரீவத்ஸவக்ஷா:" (உ) "ஶ்ரீவத்ஸவக்ஷஸம்ஜாதம்-ஶ்ரீவத்ஸவக்ஷஸம்ஜாதம்"(ங) "திருமார்பில்திருமங்கைதன்னொடும்திகழ்கின்ற" என்கிறபடியே இந்த விக்ரஹத்துக்கு நிரூபகபூதையாய், (ச) "அலர்மேல்மங்கையுறைமார்பாநிகரில்புகழாய" இத்யாதியாலே வாத்ஸல்யாதிகளுக்கு உத்பா(ஃ)வகையாக நம்மாழ்வாராலே யநுஸந்திக்கப்படிருப்பாளாய், ஆஶ்ரயிக்கிற சேதநரை அபராதாபாகரணபூர்வகமாக வங்கிகரிக்கும்படி பண்ணக்கடவ புருஷகாரத்துக்கநுரூபமான வுபயவிஷய ஸம்பந்தத்தையுடையளாயிருக்கிறலக்ஷ்மியோடுண்டான ஸம்பந்தம் இப்பதத்திலே யநுஸந்தேயம்.

(க) ரா-யு-கச௪-௧௫ (உ) (ங) தி-வாய்-௧௦-௬-௯
(ச) தி-வாய்-௬-௧௦-௧௦

(க) "మాధవో భక్తవత్సలః-மாதவோபக்தவத்ஸல꞉" (க) "శ్రీగర్భః పరమేశ్వరః-ஶ்ரீகர்ப்ப꞉பரமேஶ்வர꞉" (உ) "திருவுடையடிகள்" (ஈ) 'திருமகளார்தனிக்கேள்வன் பெருமையுடையபிரானார்' என்றும் (ச) "கோலமலர்ப்பாவைக்கன்பாகிய வென்னன்பே" என்றும், (ரு) "திருவின்மணாளன் என்னுடைச்சூழலுளான்" என்றும், வாத்ஸல்யாதிகள் ப்ரகாஶிக்கிறது-ஶ்ரீஸம்பந்தத்தாலேயிறே.

ஆக, புருஷகாரவஸ்தையையும் வாத்ஸல்யாதிகுணவிஶேஷங்களையும் சொல்லுகையாலே அநுஸந்தாநரஹஸ்யத்தில் ப்ரதமபதமான ஶ்ரீமத்பதத்தையும் நாராயணபதத்தையும் நினைக்கிறது.

இப்படி வேண்டுகிறது வித்யநுஷ்டாநங்களுக்கு ஐக்யமுண்டாகவேண்டுகையாலே; ஶ்ரீமானான நாராயணனையிறே அங்கு உபாயமாக ப்ரார்த்திக்கிறது; ஆக, ஶ்ரீமத்தையைச் சொல்லுகையாலே அபராதாதிகள்பாராமல் ரக்ஷிக்குமென்கிறது; நாராயணபதத்தால் புருஷகாரபூதையானவள் (சு) "சிதகுரைக்கும்" என்றும், "என்னடியார் செய்தாரேல் நன்றுசெய்தார்" என்றும் அவளோடே மறுதலைத்துரக்ஷிக்கும் ஸ்வபாவத்தைச்சொல்லுகிறது.

இப்படி ஶ்ரீய꞉பதியான நாராயணனாகிறான் க்ருஷ்ணனென்னுமிடம் (எ) "ఏష నారాయణః శ్రీమాన్ క్షీరార్ణవనికేతనః। నాగపర్యఙ్కముత్సృజ్య హ్యాగతో మధురాం పురీమ్ - ஏஷநாராயணஶ்ஶ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந꞉। நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்யஹ்யாகதோமதுராம்புரீம்" என்றுசொல்லிற்று; (அ) "రుక్మిణీ కృష్ణజన్మని-ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி" என்கையாலே ஶ்ரீய꞉பதித்வமநுவர்த்திக்குமிறே. குணியானவஸ்துபக்கிடத்தே குணங்களும் புகுருமாகையாலே நாராயணத்வமும் அநுவ்ருத்தமாகக் குறையில்லை.

(சு) "కృష్ణ ఏవ హి లోకానాముత్పత్తిరపి చాప్యయః-க்ருஷ்ண ஏவஹிலோகாநாமுத்பத்திரபிசாப்யய꞉" (க0) "అహం కృత్స్నస్య జగతః ప్రభవః ప్రళయస్తథా"

(க) ஸஹஸ்ரநாமம்    (உ) தி-வாய்-க-ஈ-அ-    (ஈ) தி-வாய்-க-சு-க
(ச) தி-வாய்-க0-க0-எ    (ரு) தி-வாய்-ச-கூ-க-    (சு) பெரி-தி-ச கூ-உ
(எ) ஹரிவம்ஶம்    (அ) வி-பு-க-    (சு) பார-ஸபா-ஈஅ-    (க0) கீ-எ-சு

ர-அஹம்க்ருத்ஸ்நஸ்யஜகதஃப்ரபவஃப்ரளயஸ்ததா'' (க) ''మయిసర్వమి దంప్రోతంసూత్రేమణిగణాఇవ - மயிஸர்வமிதம்ப்ரோதம் ஸூத்ரே மணிகணாஇவ'' (உ) ''మయాతతమిదంసర్వం జగదవ్యక్తమూర్తినా-மயாததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்தமூர்த்திநா'' (ங) ''మత్స్థానిసర్వభూతానినచాహంతేష్వవస్థితః । నచమత్స్థానిభూతానిపశ్యమేయోగమైశ్వరమ్- மத்ஸ்தாநிஸர்வபூதாநி நசாஹம்தேஷ்வவஸ்திதஃ । நசமத்ஸ்தாநிபூதாநி பஶ்யமேயோகமைஶ்வரம்'' இத்யாதிகளாலே நாராயணபதோக்தமான ஸர்வகாரணத்வ ஸர்வஸம்ஹர்த்ருத்வங்களும் ஸர்வவ்யாபகத்வ ஸர்வாதாரத்வாதிகளும் க்ருஷ்ணாவதாரத்திலு மநுஸந்திக்கப்படாநின்றதிறே. ஆகையாலே ஶ்ரிய:பதியாய் நாராயணனானவென்னை யென்றபடி.

ஆனால் நாராயணஶப்தோக்தங்களானஸகலகுணங்களும் அநுஸந்தேயங்களாகாதோவென்னில்; ''மாம்'' என்று ஆஶ்ரயணீயவ்யக்தியைச் சொல்லுகையாலே ஆஶ்ரயணோபயோகியான வாத்ஸல்யாதிகளை இங்கே அநுஸந்தித்து, அஹமென்று அநிஷ்டநிவ்ருத்திபூர்வகேஷ்டப்ரதனானவன்பக்கலிலே தநுபயோகிகளான ஜ்ஞாநஶக்த்யாதிகளையும் அநுஸந்திக்கப்ராப்தமாகையாலே ஸகலகுணங்களும் அநுஸந்திக்கவேணுமென்கிற நியமமில்லை.

ஆக வாஶ்ரயிக்கிற சேதநனுடைய ஸ்வாபராதபயநிவ்ருத்திஹேதுபூத புருஷகாரயோகமும், ஸ்வதோஷதர்ஶநபயநிவ்ருத்திஹேதுபூதவாத்ஸல்யமும், அப்ராப்ததாநிபந்தநபயநிவ்ருத்திஹேதுவான ஸ்வாமித்வமும், ஸ்வநைச்யதாநிபந்தந பயநிவ்ருத்திஹேதுவான ஸௌஶீல்யமும், துர்லபத்வநிபந்தநபயநிவருத்திஹேதுவான ஸௌலப்யமும், ''மாம்'' என்கிற வாஶ்ரயணீயவஸ்துவின்பக்கலிலே யநுஸந்தித்ததாயிற்று.

அநந்தரம், ஏகஶப்தம் - இவ்வுபாயவிஶேஷத்தைச் சொல்லுமிடங்களிலே (ச) ''త్వమేవోపాయభూతోమేభవ-த்வமேவோபாயபூதோமேபவ'' (ரு) ''తమేవశరణంగచ్ఛ-தமேவஶரணம்கச்ச'' (சு) ''మామేవయే ప్రపద్యన్తే-மாமேவயேப்ரபத்யந்தே'' (எ) ''తమేవచాద్యంపురుషంప్రపద్యే-

(க) கீ-எ-எ (உ) கீ-கூ-ச (ங) கீ- (ச) அஹிஸம-கூகூ-கூஅ
(ரு) கீ-க அ-கூஉ (சு) கீ-எ-கச (எ) கீ-கரு ச

தமேவசாத்யம்புருஷம்ப்ரபத்தயே" (க) "[Grantha]-த்வா மேவஶரணம்ப்ராப்ய"(உ)"பாதமேசரணாகத்தந்தொழிந்தாய்" (௩) "கழல்களவையேசரணாகக்கொண்ட" (௪) "நாகணைமிசைநம்பிரான் சரணேசரண்" இத்யாதிகளாலே அவதா(ரு)ரணஸஹிதமாகப்ரயோகித்துக்கொண்டு போருகிற ஸ்தாநப்ரமாணத்தாலே உசாரம்போலே ஏகஶப்தமும் அவதாரணமாய் உபாயத்தினுடைய ஸஹாயாந்தராஸஹத்வரூப நைரபேக்ஷ்யத்தைக் காட்டுகிறது.

ஏகஶப்தத்துக்குப்பொருள் த்விதீயவ்யாவ்ருத்திபிறே. இத்தால் எது வ்யாவர்த்யமென்னில்; உபாயத்வேநாஶ்ரயணீயமாகிற விவ்வஸ்துவுக்கு விஶேஷணமான ஏகஶப்தமாகையாலே தத்ப்ரதிகோடியான வுபாயாந்தரங்கள்; உபாயோபயோகிகளாய் வருமவைபிறே-வ்யாவர்த்யங்களாவது; அதில் கர்மஜ்ஞாநாதிஸாதநாந்தரங்களினுடைய த்யாகம் கீழேசொல்லுகையாலே அவைவ்யாவர்த்யங்களென்னவொண்ணாது. ஸ்வீகர்த்தாவான சேதநனுடைய முமுக்ஷுத்வத்தாலும் பகவதநந்யார்ஹஶேஷத்வ ஸ்வரூபநிஷ்டையாலும், (௫)"[Grantha]-மத்தஃபரதரம்நாந்யத்கிஞ்சிதஸ்திதநஞ்ஜய" என்கிற வாஶ்ரயணீயனுடைய ஸர்வஸ்மாத்பரத்வத்தாலும், தேவதாந்தரங்கள் இங்கு அப்ரஸ்துதங்களாகையாலும்-அவை வ்யாவர்த்யங்களென்னவொண்ணாது. இது தான் ஸித்தமான ஸாதநத்தைப்பற்றி வருகிற ப்ரதிபத்திமாத்ரமாகையாலே அதிலுபாயத்வமாதல்,அங்கத்வமாதலில்லாமையாலே"யாம்ஶரணம்" என்று, உபாயத்வம்-மாமென்று நிர்த்தேஶிக்கப்பட்ட வஸ்துவின்மேலே கிடக்கையாலும், அதுதான் ஸஹாயாந்தரங்களை ஸஹியாதபடி நிரபேக்ஷமாகையாலும், ப்ரபத்தியிலுபாயத்வமும் அங்கபாவமுமில்லை.

உண்டாமாகில் இவ்வுபாயத்துக்கு உபாயாந்தரவ்யாவ்ருத்தி ரூபமான ஸித்தத்வ நைரபேக்ஷ்யங்களில்லையாம். ஆனால் ஏகஶப்தத்துக்கு வ்யாவர்த்யமாக வொன்றில்லாமையாலே அது நிரர்த்

(க) ஜிதந்-க- (உ) தி-வாய்-ரு-எ-கo (௩) தி-வாய்-ரு-அ-கக
(௪) தி-வாய்-ரு-கo-கக (௫) கீ-எ-எ

தகமாமீயென்னில்; உபாயாந்தரவ்யாவ்ருத்திக்கு மவகாசமில்லையே யாகிலும், ஸித்தோபாய ப்ரதிபத்தியில் அங்கபாவமில்லையேயாகிலும், "యదనన్తరంయద్భవతి తత్తస్యకారణమ్- யதநந்தரம்யத்பவதி தத்தஸ்யகாரணம்" என்று யாதொன்றுண்டான வநந்தரத்திலே யாதொன்றுண்டாம்; அதுக்கு முன்னிலது காரணமாமென்கிற ந்யாயத்தாலே, (க) "ఉపాయోపేయత్వేతదిహతవతత్త్వంనతుగుణౌ-உபாயோபேயத்வேததிஹதவதத்வம்நதுகுணௌ" என்று உபாயத்வம் நித்யமேயாகிலும் இவனுடைய ஸ்வீகாராநந்தரம் அவனுடைய உபாயபாவம் ஜீவிக்கையாலே ஸ்வீகாரத்திலே அங்கபுத்திபிறக்கைக்கு யோக்யதையுண்டாகையாலே அதுவ்யாவர்த்யமாகலாம்.

ஆனால் அங்கபாவம் கழிகிறபடி யெங்ஙனேயென்னில்; அங்கமாவது அங்கிக்கு கிஞ்சித்காரமாமதிறே. அந்த கிஞ்சித்காரந்தான்-ஸ்வரூபோத்பாதகமாயாதல், உத்பந்நஸ்வரூபத்துக்கு வர்த்த(ர்த)கமாயாதல்; வர்த்தி(ர்தி)தஸ்வரூப பலப்ரதமாயாதலாயிருக்கும். அதில் ஸித்தஸ்வரூபமாகையாலே உத்பத்த்யபேக்ஷையில்லை. ஏகரூபமாகையாலே வ்ரு(ர்த்)த்த்யபேக்ஷையில்லை. பரமசேதநனாகையாலும், அமோக(கு)ஸங்கல்பனாகையாலும் ஸர்வஜ்ஞத்வாதிகுணவிஶிஷ்டனாகையாலும் நிருபாதிக ஸுஹ்ருத்தாகையாலும், பலப்ரதாநத்திலும் அந்யஸாபேக்ஷதையில்லை.

"యద్యత్సాధనంతత్తత్సాఙ్గమ్-யத்யத்ஸாதநம்தத்தத்ஸாங்கம்" என்கிறபடியே உபாயமாகில் அங்கஸாபேக்ஷமாயன்றோ இருப்பது, பக்த்யாதிகளைப்போலேயென்னில்; அது உபாயத்வநிபந்தநமன்று; ஸாத்யத்வநிபந்தநம்; எங்ஙனேயென்னில்; பக்தி-(உ) "జన్మాన్తరసహస్రేషు తపోజ్ఞానసమాధిభిః । నరాణాంక్షీణపాపానాం కృష్ణే భక్తిః ప్రజాయతే- ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாநஸமாதிபி:। நராணாம்க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி:ப்ரஜாயதே" என்கிறபடியே சிரகாலஸாத்யமாகையாலே கர்மஜ்ஞாநங்களை யபேக்ஷித்திருக்கும். சிரகாலேந நிஷ்பந்நமாக வேண்டுகைபாலே பகவத்ப்ரஸாதாதி ஸாபேக்ஷமாயிருக்கும். அசேதநமாகையாலே பலப்ரதாநத்திலும் ஈஶ்வராநுக்ரஹ ஸாபேக்ஷமாயிருக்கும்.

---

(க) ர-ஸ்த-உ (உ) லக்வத்ரிஸ்ம்ருதி-

இவ்வுபாயம் அவற்றை யபேக்ஷித்திராது. ஆகையாலே ஸ்வீகாரம் அங்கமாகமாட்டாது. உபாயாந்தரங்கள் உபாயமாகிறது பல ப்ரதானதேவர்களுக்கு ப்ரஸாதநமாகிறவோபாதி இதுவும் ப்ரஸாதநமாகுலோவென்னில்; அவர்கள் பலப்ரதாநோந்முகரல்லாமையாலே ப்ரஸாதநஸாபேக்ஷதையுண்டு; இங்கு உபாயபூதனுன வீஸ்வரன் எதிர்சூழல்புக்கு ஆள்பார்த்துத் திரிகிறவனுகையாலும் நிருபாதிக ரக்ஷகனுகையாலும் அவனுக்கு ப்ரஸாதநமாகச் செய்யவேண்டுவதில்லை. உண்டென்றிருக்கில் தனக்கு ஸ்வாபாவிகமான ஸ்வரூபபாரதந்த்ர்யத்தையும் கழித்து அவன் ரக்ஷகத்வத்தையும் ஸோபாதிகமாக்குகிறுனித்தனை.

ஆனுல் இவ்வுபாயம் இத்தனைநாளும் ஜீவியாதொழிவானென்னென்னில ; உபாயமாவது-ஒருவனுடைய இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரம்பண்ணுகையாகையாலே அதுக்கொரு அதிகாரியாகில் அபேக்ஷிதம் ; ஸ்வீகாரம் என்செய்யவென்னில் ; ப்ரயோஜநாந்தரபரிலும் ஸாதநாந்தரநிஷ்டரிலுங் காட்டில் வ்யாவ்ருத்தமான வநந்ய ப்ரயோஜநத்வ அநந்யஸாதநத்வங்களை ப்ரகாஶிப்பிக்கிறது.

இப்படி இவனுடைய ரக்ஷணத்திலே உத்யுக்தனுய் நிருபாதிக ரக்ஷகனுயிருக்கிறவன் பக்கலிலே "ஸ்துதிப்ரதிபத்தி:-யாசநாப்ரபத்தி:" "ப்ரார்த்தநாமதி:-ப்ரார்த்தநாமதி:" என்கிற ப்ரார்த்தனை வேண்டுவானென்னென்னில் ; மோக்ஷதசையில் ஸர்வம்கரிஷ்யாமி யென்கிற ஸங்கல்பாநுகுணமாக ஸர்வதேஶஸர்வகால ஸர்வாவஸ்தோசிதமான ஸர்வவிதகைங்கர்யங்களையும் கொள்ளுவதாக வொருப்பட்டிருக்கச்செய்தேயும் அடிமைகொள்ளுகிறவன் உத்துங்கதத்வமாகையாலும் அவாப்தஸமஸ்தகாமனுய்க்கொண்டு நிரபேக்ஷனுகையாலும், அடிமைதான் ஸ்வரூபஸத்தாஹேதுவான ஶேஷத்வத்தினுடைய வுத்பத்திஹேதுவாய்க்கொண்டு அநுரூபமாய் அபிமதமாயிருக்கையாலும், ஶேஷவ்ருத்தியிலாதராதிஶயத்தாலும் ப்ரார்த்தனைவேண்டினவோபாதி இங்கும் உபாயபூதனுனவன் ரக்ஷணோந்முகனுயிருக்கச்செய்தேயும் அவன்ஶ்ரிய:பதித்வ நாராயணத்வாதிகளாலே ஸர்வாதிகனுயிருக்கையாலும், தன்னுடைய ஸ்வரூபபாரதந்த்ர்யாநுஸந்தாநத்தாலே இவ்வுபாயத்தில் தனக்குண்டான வாதராதிஶயத்

தாலும் பரதந்த்ரசேதநனுகையாலும் சைதந்யகார்யமான ப்ரார்த்தனேவேணும்.

அங்கு கைங்கர்யம் ஶேஷபூதமான ஸ்வரூபத்துக்கு அநுரூபமான புருஷார்த்தமாகையாலே ஶேஷபூதனுடைய சைதந்யகார்யமாக ப்ரார்த்தனைபுகுந்தது. இங்கு உபாயவிஶேஷமும் பரதந்த்ர ஸ்வரூபத்துக்கு அநுரூபமாகையாலே பரதந்த்ரனுடைய சைதந்ய கார்யமாக ப்ரார்த்தனைபுகுந்தது. ஆகையாலே இந்தஸ்வீகாரம் அதிகாரியை விஶேஷித்துக்கொடுக்கிறது. உபாயமுமன்று. உபாயாங்கமுமன்று; ப்ரபத்தவ்யனுக்கு ரக்ஷகத்வஶேஷித்வாதிகள் ஸ்வரூபமானுப்போலெ ரக்ஷ்ய ஸ்வரூபனான ப்ராப்தாவுக்கும் இப்ப்ரபத்தி ஸ்வரூபம்.

"அவ-ரக்ஷணே" "மந-ஜ்ஞாநே" என்கையாலே ரக்ஷணதர்மாஶ்ரய வஸ்துவுக்கு ரக்ஷ்யவிஷயம் அபேக்ஷிதமானுப்போலே ஜ்ஞாநாஶ்ரயவஸ்துவுக்கும் ஜ்ஞேயவிஷயம் அபேக்ஷிதமாயிருக்கும். இருவர்க்கும் இரண்டும் விஷயமாயிருக்கையாலும், இரண்டும் தர்மிக்ராஹக ப்ரமாணஸித்தமாகையாலும் இருவர்க்கும் இரண்டும் ஸ்வரூபமாயிருக்கும்.

இனி அதிகாரிக்கு அங்கபாவமுண்டாகில் ஸ்வீகாரத்துக்கும் அங்கபாவமுண்டு. க்ஷுத்து அந்நத்துக்கு ஸாதநமின்றிக்கே போஜநாபேக்ஷாத்யோதகமாகிறவோபாதி, இதுவும் உபாயத்வஸம்பாதநம் பண்ணுகிறதன்று. ரக்ஷாபேக்ஷாத்யோதகமாய்க் கிடக்கிறது. (க) "த்வமேவோபாயபூதோமேபவ-த்வமேவோபாயபூதோமேபவ" (உ) "தஸ்யோபாயதாயாச்ஞா-ததேகோபாயதாயாச்ஞா" என்றிறே லக்ஷணவாக்யங்களும்.

(ங) "உணர்விலுள்ளேயிருத்தினேன் அதுவுமவனதின்னருளே" என்று இப்ப்ரதிபத்திக்கு உபாயகார்யத்வமுண்டித்தனையல்லது உபாயஹேதுத்வமில்லை; (ச) "உன்மனத்தாலென்நினைந்திருந்தாய்" (ரு) "என்செய்கின்றாய்சொல்லு" என்று அவன்நினைவேயிறே உபாயம். இத்தலைக்கு (சு) "தஸ்ய-தத்தஸ்ய" என்றிருக்கைக்கு மேலில்லையே; ராஜமஹிஷி க்ஷிக்குத்துதல், குடம் சுமத்தல்செய்யுமோபாதியிறே இவன் ஸ்வரக்ஷண வ்யாபாரத்திலிழிகையாகிறது. ராஜாவுக்கு போகயோக்யமாய் அவனாலேரக்ஷ்யமான ஶரீரரக்ஷணம்பண்ணினால

(க) அஹி-ஸம்-ருக-ருஅ (உ) விஷ்வக்ஸேநஸம் (ங) தி-வாய்-அ-அ-ந
(ச) தி-மொ-உஎ-க (ரு) (சு) ரா-ஸு-ருக-ருO

அவளுக்கும் ஸ்வரூபஹாநியாய் ராஜாவுக்கும் அவத்யமாமாபோலே யிறே ஈஶ்வரஶேஷமாய் ஈஶ்வரைகரக்ஷ்யமான ஸ்வரூபஸம்ரக்ஷணத் திலிவனிழிந்தால் இவனுக்கும் ஸ்வரூபஹாநியாய் ஈஶ்வரனுக்கும் அவத்யமாயிருக்கும்படியாகையாலே இவ்வேகஶப்தம்வ்ரஜவென்று விஹிதமான ஸ்வீகாரத்திலங்கபாவத்தைக் கழிக்கிறது.

அதவா, இவ்வேகஶப்தம் ஶரணஶப்தவிஶேஷணமாய், அத் தாலே அத்விதீயமான வுபாயமென்கிறதென்றருளிச்செய்வார்கள். அத்தாலும் உபயாந்தரநிரபேக்ஷ்யமே பலிக்கிறது. நிரபேக்ஷோபாயமா கையாலேயிறே ஆநுகூல்யாதிகளும் அங்கமின்றிக்கே ஸம்பாவித ஸ்வபாவங்களாகப் பூர்வாசார்யர்களருளிச் செய்வர்கள்.

(ஶரணம்) கீழ், மாமென்றுஸ்வீகார்யத்வேந சொன்னவஸ்து வை ஸ்வீகரிக்கும் ப்ரகாரத்தைச் சொல்லுகிறது. (ஶரணம்) (க) "[illegible]-உபாயேக்ருஹரக்ஷித்ரோஶ்ஶப்தஶ்ஶரணமித்யயம் | வர்த் ததேஸாம்ப்ரதஞ்சைஷஉபாயார்த்தைகவாசக:" என்கிறபடியே ஶர ணஶப்தம் உபாயத்தையும் க்ருஹத்தையும் ரக்ஷிதாவையும் காட்டு மேயாகிலும் "[illegible]-ஸர்வதர்மாந்பரித்யஜ்ய" என்கிற ஸாதநாந்தரத்யாகத்துக்கு அநந்தரபாவியாய் "[illegible]-பாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" என்கிற பாபவிமோசநத்துக்குப் பூர்வபாவியான ஶரணவரணமாகையாலே உபாயவாசியாய்க் கிடக் கிறது.

(உ) "[illegible]-ஶ்ரியாஸார்த்தம்ஜகத்பதிராஸ்தே" என்றும், (ங) "[illegible]-ஸோஶ்நுதேஸர்வாந்கா மாந்ஸஹ" என்றும், (ச) "[illegible]-ஸதாபஶ்யந்தி" என்றும், ஶ்ரி ய:பதியாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் விலக்ஷணவிக்ரஹோபே தனானவஸ்துவையே ப்ராப்யமாகச் சொல்லுகையாலும், த்வயத்தி லுத்தரவாக்யத்தில் ஶ்ரீமச்சப்தத்தாலும் நாராயணபதத்தாலும் ஶ் ரிய:பதியாய் கல்யாணகுணாகரமாய் விலக்ஷணவிக்ரஹவிஶிஷ்டமான வஸ்துவையே கைங்கர்யப்ரதிஸம்பந்திதயாப்ராப்யமாகச் சொல்லு

(க) அஹி-ஸம்-௲ ௲ (உ) வாயுபுராணம் (ங) தை-ஆ-க-
(ச) ஸாம-உத்தர-

கையாலும், கீழ் "மாம்" என்று நிர்த்தேசிக்கப்பட்ட வஸ்துவுக்கு உபேயதயாவரணமுண்டாகையாலே இப்போது உபேயதயாவரணத்தைக்கழித்து உபாயதயாவரணத்தைச் சொல்லுகிறது.

கீழ்ப்ரஸ்துதமான ஸாதநாந்தரத்யாகமே இத்தையும் ஸாதநத்திலே யொதுக்கித் தாராதோவென்னில்; (க) "తస్యకార్యంనవిద్యతే- தஸ்யகார்யம்நவித்யதே" (உ) "క్షేత్రజ్ఞఃకరణీజ్ఞానంకరణంతస్యతేనతత్ । నిష్పాద్యంముక్తికార్యంవైకృతకృత్యంనివర్తతే - க்ஷேத்ரஜ்ஞஃகரணீஜ்ஞாநம் கரணம்தஸ்யதேநதத் । நிஷ்பாத்யமுக்திகார்யம்வைக்ருதக்ருத்யம்நிவர்ததே" என்கிறபடியே ஸாத்யஸித்த்யநந்தரம்ஸாதநத்யாகம் கூடுமாகையாலும், ப்ராபகஸமயத்திற்போலே ப்ராப்யஸமயத்திலும் ஸாதநாந்தரத்யாகம் வேண்டுமாகையாலும், த்யாஜ்யமான ஸாதநாந்தரங்கள் இத்தை ஸாதநத்திலொதுக்கித் தரமாட்டாது.

ஆனாலும் உபாயஸ்வீகாரத்துக்கு அங்கதயாவிதேயமான வுபாயாந்தரத்யாகமாகையாலே ஸ்வீகார்யவஸ்துவினுடைய வுபாயத்வத்தைக் காட்டுமேயென்னில்; "ఆక్షేపతఃప్రాప్తాదాభిధానికంగ్రాహ్యమ్- ஆக்ஷேபதஃப்ராப்தாதாபிதாநிகம்க்ராஹ்யம்" என்கிற ந்யாயத்தாலே அர்த்தஸித்தமாய் வருமதிலும் ஶப்தத்தால்வருமது அழகியதாகையாலே மாமென்று நிர்த்தேசிக்கப்பட்டவஸ்துவினுடைய உபாயதயாவரணத்தைக் காட்டுகிறது. ஆக ஶரணஶப்தம் இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரத்துக்கு அவ்யவஹிதஸாதநம் வாத்ஸல்யாதிகுணவிஶிஷ்டவஸ்து வென்றதாயிற்று.

அநந்தரம் வ்ரஜவென்று ஸ்வீகாரத்தை விதிக்கிறது. "மாம்" என்று ஸ்வீகார்யவஸ்துவைச் சொல்லிற்று. ஏகமென்று அதினுடைய நைரபேக்ஷ்யத்தைச் சொல்லிற்று. ஶரணமென்று ஸ்வீகாரப்ரகாரத்தைச் சொல்லிற்று; இதில் ஸ்வீகாரத்தைச் சொல்லுகிறது.

கீழ் பரித்யாஜ்யமாகச் சொல்லிற்று (ங) "యేచవేదవిదోవిప్రాయేచాధ్యాత్మవిదోజనాః । తేవదన్తిమహాత్మానంకృష్ణంధర్మంసనాతనమ్- யேசவேதவிதோவிப்ராயேசாத்யாத்மவிதோஜநாஃ।தேவதந்திமஹாத்மாநம்க்ரு

(க) (உ) வி-பு-௬-௭-௬அ (ங) பார-ஆர-அஅ

ஷ்ணம்கர்மம்ஸநாதநம்" என்கிற ஸநாதநதர்ம வ்யதிரிக்தமான ஸாத்யஸாதநங்களையும் ததங்கதயாவிஹிதமான ஸித்ததர்மத்தையும்; இங்கு ஸ்வீகார்யத்வேந விதிக்கிறது-ஸாக்ஷாந்மோக்ஷஸாதநமாய் நிரபேக்ஷமான ஸித்ததர்மத்தை;

ஆக, வ்ரஜவென்று ஸாதநாந்தரத்யாகத்தை யங்கமாகவுடைத்தாய், அதஏவத்யாஜ்யகோடியிலுமுத்தீர்ணமாய், வாத்ஸல்யகுண விஶிஷ்டமாய், நிரபேக்ஷமான வஸ்துவைவிஷயமாக வுடைத்தாய் உபாயகோடியிலும் உபேயகோடியிலுமநநுப்ரவிஷ்டமாய் மஹாவிஶ்வாஸபூர்வகமாய் ப்ரார்த்தநாகர்ப்பமாய், அத்யவஸாயாத்மகமாய் பகவத்ரக்ஷகத்வாநுமதிரூபமாய், சைதந்யகார்யமாய் பகவத்ப்ரீதிஹேதுவாய், ஸ்வரூபாநுரூபமாய், வ்யபிசாரவிளம்பரஹிதமாய் ஸக்ருதநுஷ்டேயமாயிருப்பதொரு ஜ்ஞாநவிஶேஷத்தை விதிக்கிறது.

எங்ஙனேயென்னில்;-"ஸர்வதர்மாந்பரித்யஜ்ய" "வ்ரஜ" என்று த்யாகஸ்வீகாரங்களிரண்டையும் ஏககர்த்ருகமாகச் சொல்லுகையாலும், த்யஜ்யவென்கிற விடத்தில் ல்யப்பாலும் இந்த ஸ்வீகாரம் த்யாகாங்கமென்னுமிடத்தைக் காட்டுகிறது. இந்த வுபாயவரணந்தான்-உபாயமுமன்றிக்கே உபாயாங்கமுமின்றிக்கேபகவதுபாயத்வ ஜ்ஞாநமாத்ரமாகையாலே சைதந்யகார்யமாய் ஶரண்யனுடைய வுபதேஶமாய்க்கொண்டு உபாயகார்யமாகையாலே த்யாஜ்யகோடியிலுத் தீர்ணமாயிருக்குமென்கிறது. ஸ்வதோஷதர்ஶநாதிகளாலே பீ(ஃ)தனாய் ஆஶ்ரயணத்தில் வெருவினவனுக்கு தத்பீதிநிவர்த்தகமான வாத்ஸல்யாதி குணவிஶிஷ்டவஸ்துவை யாஶ்ரயணீயமாக நிர்த்தேஶிக்கிற மாமென்கிற பதத்தில் த்விதீயாந்தத்வத்தாலே வாத்ஸல்யாதிகுண விஶிஷ்டவஸ்துவை விஷயமாகக் காட்டுகிறது. "மாமேகம்ஶரணம்" என்று அவ்வஸ்துவினுடைய நிரபேக்ஷோபாயத்வத்தைச் சொல்லுகையாலே ஸ்வீகாரம் உபாயகோடியிலநநுப்ரவிஷ்டமென்னுமிடத்தைக் காட்டுகிறது.

"మహావిశ్వాసపూర్వకమ్ । తదేకోపాయతా యాచ్ఞా-மஹாவிஶ்வாஸபூர்வகம் ததேகோபாயதாயாச்ஞா" என்று லக்ஷணவாக்யத்திற் சொல்லுகையாலும், (க) "శక్తేస్సూపసదత్వాచ్చ ప్రాయోగాచ్ఛాశ్వతాత్ । ఈశ

(க) லக்ஷ்மீதந்த்-கஎ-எ0

శక్తస్య సమ్బన్ధాదనిదమ్ప్రథమాదపి । రక్షిష్యత్యనుకూలాన్న ఇతియాసుదృఢామతిఃసవి శ్వాసోభవేచ్ఛక్ర సర్వదుష్కృతనాశనః - ஶக்தேஸ்ஸ்வபஸத்வாச்சக்ருபாயோகாச்சஶாஶ்வதாத் । ஈஶேஶிதவ்யஸம்பந்தாதநிதம்ப்ரதமாதபி । ரக்ஷிஷ்யத்யநுகூலாந்ந இதியாஸுத்ருடாமதி:। ஸவிஶ்வாஸோபவேச்சக்ரஸர்வதுஷ்க்ருதநாஶந:" என்று ஸர்வஶக்தியோகத்தாலும் ஸ்வதஸ்ஸித்தமாய் நிர்ஹேதுகமான க்ருபாயோகத்தாலும் ஸ்வாபாவிகமான நியந்த்ருநியாம்யஸம்பந்தத்தாலும், இவ்வாகாரங்களால்விமுகரல்லாதநம்மை ரக்ஷிக்குமென்கிற த்ருடாத்யவஸாயத்தைச் சொல்லுகையாலும், "ப்ரபத்யே" என்று இந்த ஸ்வீகாரத்தை ஸ்வகதமாக வநுஸந்திக்கிறவிடத்தில் "ப்ர" என்கிற வுபஸர்க்கத்தாலே மஹாவிஶ்வாஸத்தைச் சொல்லுகையாலும், (௧) "విశ్వాసపూర్వకంభగ వన్తం నిత్యకింకరతాంప్రార్థయే-விஶ்வாஸபூர்வகம்பகவந்தம் நித்யகிங்கரதாப்ப்ரார்த்தயே" என்று பாஷ்யகாரர் விஶ்வாஸபூர்வகமாக ப்ரார்த்திக்கையாலும், மஹாவிஶ்வாஸபூர்வகமென்னுமிடத்தைக் காட்டுகிறது;

ஆக, இத்தால் ஸ்வக்ருததோஷதர்ஶநத்வம் உபாய(ஃ)பல்குத்வம், உத்தேஶ்ய துர்லபத்வமாகிற ஶங்காத்ரயநிவர்த்தக பகவத்ஸ்வரூபகுணாநுஸந்தாநத்தாலே பிறந்த மஹாவிஶ்வாஸத்தைச் சொல்லுகிறது.

இவை ஶங்காத்ரய நிவர்த்தகமாகிறபடி யெங்ஙனேயென்னில்; (௨) "நன்கள் திரு" என்று ஆஶ்ரயிக்கிற சேதநனோடும் ஆஶ்ரயணீயனான ஈஶ்வரனோடுமுண்டான மாத்ருத்வமஹிஷீத்வரூபமான ஸம்பந்தத்தையுடையளாகையாலே ஸ்வாபராதபீதனான சேதநனுக்கு ஆஶ்ரயணீயையாய் அவன்சொல்லும் வார்த்தைகளைக் கேட்டும் அவற்றை ஈஶ்வரனைக்கேட்பித்தும் இவனபராதங்களைப் பொறுப்பித்துச் சேரவிடுகைக்குறுப்பான ஶ்ரீமத்தையை யநுஸந்திக்கையாலும், அவளாலே உத்பூ(ద్భూ)தமாய் தோஷமேபோக்யமாக வங்கீகரிக்கைக்கு உறுப்பான வாத்ஸல்யகுணாநுஸந்தாநத்தாலும் ஸ்வக்ருததோஷதர்ஶநத்தாலேவந்த பயம்போம்.

ஸ்வத்திலுடையலாபம் ஸ்வாமிக்காகையாலே தன்பேறாகக் கார்யம் செய்கைக்குறுப்பான ஸ்வாமித்வரூப ஸ்வரூபாநுஸந்தாந

---

(௧) ஶரணாகதிகத்யம். (௨) ௨-திருவ-௫௬

த்தாலும், அஶரண்யஶரண்யத்வமாகிற குணாநுஸந்தாநத்தாலும் உபாயபல்ருத்வ நிபந்தநமான பயம்போம். நாராயணனென்கிற ஸ்வாபாவிகஸம்பந்தயுக்த ஸ்வரூபாநுஸந்தாநத்தாலும் ஆஶ்ரிதர்க்குச்செய்யவேண்டுமவை யறிகைக்கீடான ஸர்வஜ்ஞத்வத்தையும் அறிந்தாற்போலே தலைக்கட்டுகைக்குறுப்பான ஸர்வஶக்தியோகத்தையும் அபேக்ஷாநிரபேக்ஷமாகச் செய்கைக்குறுப்பான ஔதார்ய குணத்தையும் அபராதஜ்ஞாநாதிகளுக்குறுப்பான குணவிஶேஷங்களை ரக்ஷணோபயுக்தமாக்குகிற க்ருபாகுணத்தையு மநுஸந்திக்கையாலும் உத்தேஶ்யதுர்லபத்வமடியாகவந்த பயம்போம்.

ஆக இப்படித்தன்னுடைய ஸ்வரூபஸித்த்யர்த்தமாகவும் குணஸித்த்யர்த்தமாகவும் ரக்ஷிக்குமென்கிற மஹாவிஶ்வாஸபூர்வகமாயிற்றே ப்ரபத்தியிருப்பது. "𑌯𑌾𑌚𑌨𑌾𑌪𑍍𑌰𑌪𑌤𑍍𑌤𑌿𑌃-யாசநாப்ரபத்தி:" "𑌪𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌨𑌾𑌮𑌤𑌿𑌃-ப்ரார்த்தநாமதி:" (௧) "தமியேனுக்கருளாய்" (௨) "அடிசேர் வண்ணமருளாய்" (௩) "அருளாயுய்யுமாறெனக்கு" என்று ப்ரார்த்தநாரூபமாக வநுஸந்திக்கையாலும் இவ்வுபாயத்தில் ஸ்வீகர்த்தாவுக்குண்டான வாதராதிஶயத்தாலும் ப்ரார்த்தநாரூபமாயிருக்குமென்னுமிடத்தைக்காட்டுகிறது. (௪) "அறந்தானாய்த்திரிவாய்-உன்னையென்மனத்தகத்தே திறம்பாமைக்கொண்டேன்" (௫) "களைகண் மற்றிலேன்" (௬) "உன்னாலல்லால்யாவராலுமொன்றுங்குறைவேண்டேன்" என்கையாலும், (௭) "𑌸𑍁𑌦𑍃𑌢𑌾𑌮𑌤𑌿𑌃. ஸுத்ருடாமதி:" என்று த்ருடாத்யவஸாயத்தைச் சொல்லுகையாலும், அத்யவஸாயாத்மகமாயிருக்கும்.

(௮) "வைத்தேன்மதியால்" என்று அநுமதியைச் சொல்லுகையாலும், "𑌮𑌾𑌂𑌶𑌰𑌣𑌂𑌵𑍍𑌰𑌜-மாம்ஶரணம்வ்ரஜ" என்கிற வுபதேஶாநுகுணமாக "ப்ரபத்யே" என்றநுஸந்திக்கையாலும் பகவத்ரக்ஷகத்வாநுமதிரூபமாயிருக்கும், ப்ரணவோக்தமான பகவதநந்யார்ஹஶேஷத்வஜ்ஞாநம் ஶேஷஶேஷிபாவஸம்பந்த ஸம்பாதநம்பண்ணுகிறதன்றிக்கே சேதநனை விவனுடைய ப்ரதிபத்திரூபமாகையாலே சைதந்யகார்யமாகிற வோபாதி ஸாதநாந்தர நிவ்ருத்திபூர்வகமான

---

(௧) தி-வாய்-௫-௭-௨ (௨) தி-வாய்-௯-௧௦-௨ (௩) தி-வாய்-௫-௭-௯
(௪) தி-மொ-௬-௩-௨ (௫) தி-வாய்-௫-௮-௮ (௬) தி-வாய்-௫-௮-௨
(௭) லக்ஷ்மீ தந் (௮) தி-வாய்-௮-௭-௧௦

ஷித்தஸாதநத்வ ப்ரதிபத்தியும் உபாயத்வஸம்பாதநம் பண்ணுகிற தன்றிக்கே ஸித்தமானவுபாயத்தைப் பற்றவுண்டான ப்ரதிபத்தி யாகையாலே சைதந்யகார்யமாயிருக்கும்.

(க) "உன்கடைத்தலையிருந்துவாழும்சோம்பரையுகத்தி" என்கையாலும், நானே ஸர்வபாபங்களையும் போக்குகிறேனென்கையாலும் பகவத்ப்ரீதிஹேதுவாயிருக்கும்; தாத்வர்த்தமான ரக்ஷகத்வத்துக்கு ப்ரதிஸம்பந்திதயாரக்ஷ்யமானவஸ்துவுக்கு ஸ்வவ்யாபாரநிஷேதபூர்வகமாக ரக்ஷகவ்யாபாரைகரக்ஷ்யமாகை உசிதமாகையாலும் பரதந்த்ரஸ்வரூபத்துக்கு பரவ்யாபாரமேரக்ஷகமாகையாலும் ஸ்வரூபாநுரூபமாயிருக்கும்; ஸித்தரூபமாகையாலும் (உ) "సత్యకామస్సత్యసఙ్కల్పః-ஸத்யகாமஸ்ஸத்யஸங்கல்பః" என்று அமோக(஘)ஸங்கல்பமாகையாலும், ப்ராரப்த(ப)கர்மாவஸாநம் பார்க்கவேண்டாதபடி ஆரப்தஶரீராவஸாநத்திலே பலமாகையாலும் வ்யபிசாரவிளம்பவிதுரமாயிருக்கும்.

"సకృదేవం ప్రపన్నస్య కృత్యం నైవాన్యదిష్యతే - ஸக்ருதேவம்ப்ரபந்நஸ்ய க்ருத்யம்நைவாந்யதிஷ்யதே" என்று (ந) "సకృదేవహి శాస్త్రార్థః కృతస్సంసారతారకః - ஸக்ருதேவஹிஶாஸ்த்ரார்த்தః க்ருதஸ்ஸம்ஸாரதாரகः" (ச) "నరస్యబుద్ధిదౌర్బల్యాదుపాయాన్తరమిష్యతే-நரஸ்யபுத்திதௌர்ப்பல்யாதுபாயாந்தரமிஷ்யதே" என்றும், ஸக்ருதநுஸந்தாநமாத்ரத்தாலே ஸம்ஸாரதாரகமென்கிறபடியே ஈஶ்வரனே யுபாயமென்று ஒருகாலநுஸந்தித்தால் பின்னை கர்த்தவ்யமில்லை யென்கையாலும், இதில் விஶ்வாஸம் பண்ணமாட்டாத துர்ப்பலபுத்திகளாகையாலே உபாயாந்தரம் தேடுகிறார்களத்தனை யென்கையாலும், ஸக்ருதநுஷ்டேயமென்னுமிடம் ஸித்தம்.

ஸக்ருதநுஷ்ட்டேயமாய் பின்பு கர்த்தவ்யாம்ஶமின்றியிலேயிருந்ததாகிலும் ஸ்வர்க்கார்த்தமான ஜ்யோதிஷ்டோமம் ஸப்தாஹஸ்ஸிலே ஸமாப்தமானாலும் தத்கார்யமான வஹ்நிஹோத்ரஹோமம் யாவச்சரீரபாதம் அநுஷ்டேயமாகிறாப்போலே இதில் விஶ்வாஸம் யாவத்பலப்ராப்தி நடக்கவேணும். "అగ్నిహోత్రం జుహుయాత్స్వర్గకామః

(க) திருமா-ருஅ (உ) சாந்தோ (ங) லக்ஷ்மீ-கஎ-அடு

(ச)

அக்நிஹோத்ரம்ஜுஹுயாத்ஸ்வர்க்ககாம:” என்று அநுஷ்டியாத போது ஸ்வர்க்கமாகிற பலஸித்தியில்லையாய் அநுஷ்டாநத்தாலே பலஸித்தியாகிறஅக்நிஹோத்ரஹோமத்தையும்கேவலசைதந்யகார்ய மான ஸ்வீகாரத்தில் மேல்வருகிற விஸ்வாஸவிஸேஷத்தையும் ஸம மாகச் சொல்லலாமோவென்னில்; விஸ்வாஸத்துக்குப் பலஹேதுத்வ மில்லையாகிலும் ப்ரபத்திநிஷ்டையை ப்ரகாஸிப்பிக்கையும் யாவத் பலப்ராப்தி காலக்ஷேபமாகையும் ஸம்ஸாரதோஷாநுஸந்தாநதசை யில் நிர்ப்பயனாயிருக்கையுமாகிற பலங்கள் இதுக்குமுண்டாகையா லே சொல்லலாமல்லது ஸாதநாங்கத்வம் ஸ்வீகாரத்துக்குமில்லையா யிருக்க தத்கதமான விஸ்வாஸத்துக்கு உண்டாகிறதன்றிறே.

இந்த விஸ்வாஸாவ்ருத்திகள் கணையத்துக்குள்ளிருப்பாரைப் போலேநிர்ப்ப(ய)ரனாயிருக்கைக்குறுப்பென்று ஆச்சான்பிள்ளையரு ளிச்செய்வர். ஏவம்ரூபமான ஸ்வீகாரத்தை விதிக்கிறது, “வ்ரஜ” என்கிற மத்யமபுருஷைகவசநத்தாலே; “ப்ரபத்யே” என்கிற ஸ்வீ காராநுஸந்தாநத்திற்காட்டில் இதுக்குவாசி - த்யாகவிஸிஷ்டமாக விதிக்கையும் நிரபேக்ஷமாகவிதிக்கையும், ஸௌலப்யாதிகுணவிஸிஷ் டவஸ்து விஷயத்வம் இரண்டுக்குமுண்டு.

இதுதான் “வ்ரஜ-கதௌ” என்கிற தாதுவிலே கதிவிஸேஷ மாய், ச(X)த்பர்த்தம்-புத்த்யர்த்தமாய், புத்திகதியைக் காட்டுகிறது. இந்த கதிவிஸேஷம் (க) “బద్ధాఞ్జలిపుటందీనంయాచన్తంశరణాగతమ్-பத் தாஞ்ஜலிபுடம்தீநம் யாசந்தம்ஸரணாகதம்” என்கிறபடியே த்ரிவித கரணத்தாலுண்டாயிற்றாகில் பூர்ணப்ரபத்தியாய், அதிகாரிவைப வம் ப்ரகாஸிக்கக்கடவது. ஏககரணமாத்ரத்தாலே யானபோது பக வத்வைபவம் ப்ரகாஸிக்கக்கடவது. ஆனாலும் ப்ரபத்தியாகிறது ப்ரதிபத்தியாகையாலே மாநஸமாகக்கொள்ளக்கடவது. ஆக இந்த ஸ்வீகாரத்துக்கு தர்மத்யாகம் அங்கமாகக்கடவது. த்யாகவிஸிஷ்ட மான ஸ்வீகாரம் அதிகாரிவிஸேஷணமாகக்கடவது. ஸ்வீகாரவிஸி ஷ்டனான அதிகாரிக்கு வாத்ஸல்யாதிகுணவிஸிஷ்டன் உபாயமாகக் கடவன்;

---

(க) ரா-யு-கஅ-உள

ஆக, பூர்வார்த்தம்-த்யாஜ்யமான ஸாதநங்களையும் அவற்றினுடைய வாநந்த்யத்தையும் த்யாகத்தையும் த்யாகப்ரகாரத்தையும், த்யாகம் அங்கமென்னுமிடத்தையும் ஸ்வீகார்யஸ்வரூபத்தையும் தந்நைரபேக்ஷ்யத்தையும், ஸ்வீகாரப்ரகாரத்தையும் ஸ்வீகாரத்தையும் சொல்லிற்று.

ஆக இத்தால் அதிகாரிக்ருத்யம்சொல்லி, மேல்இப்படி ப்ரபத்தவ்யனான ஈஸ்வரக்ருத்யத்தையும் ப்ரபத்தாவானவதிகாரியுடைய க்ருத்யலேஶத்தையும் சொல்லுகிறது. ப்ரபத்தவ்யக்ருத்யம் ப்ரபத்தவ்யபலமோக்ஷவிரோதி ஸகலபாபநிவர்த்தநம்; ப்ரபந்நக்ருத்யம் தத்பலநிர்ப்ப(ர்)ரத்வாநுஸந்தாநம்; (அஹந்த்வேத்யாதி) "மஹம்" என்று கீழ்ச்சொன்ன வுபாயபலமான இஷ்டப்ராப்தி-அநிஷ்டநிவ்ருத்திபூர்வகமாயிருக்கையாலே நிவர்த்யமானவநிஷ்டஸ்வரூபம் மேற்சொல்லக்கடவதாகக்கொண்டு நிவர்த்தகமானஸ்வரூபத்தை "அஹம்" என்று காட்டுகிறது. உபாயமாகவுன்னாலே ஸ்வீகரிக்கப்பட்ட நானென்றபடி.

"மோக்ஷயிஷ்யாமி"என்கிற வுத்தமனுக்கு ப்ரதிஸம்பந்தியாய்க் கொண்டு அஹம் ஶப்தம்வாராநிற்கப் பிரித்து அஹமென்கிறவிதுக்கு ஒருவிவக்ஷையுண்டு; அதாவது-த்வத்ஸ்வீக்ருதனான நானென்றவாறே ஸ்வீகார்யரூபமான வாத்ஸல்யாதிகுணவைஶிஷ்டியேதோற்றும்; அத்தை வ்யாவர்த்தித்துக் கார்யகரத்வோபயோகி ஜ்ஞாநஶக்த்யாதிகுணவைஶிஷ்டி தோற்றுகைக்காக;

(அஹம்) தேவமநுஷ்யாத்யபிமாநிகளுடைய அஹமர்த்தம் அவ்வளவிலே பர்யவஸிக்கும்; ப்ரக்ருத்யாத்மவிவேகம்பண்ணினவனுடைய வஹமர்த்தம் ப்ரக்ருதிசேஷபரமாய், பரஶேஷமான வாத்மவஸ்துவின்பக்கலிலே பர்யவஸிக்கும்; ஈஸ்வரனுடைய அஹமர்த்தம் ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தங்களையும் தனக்கு விபூதியாகவுடையவனாகையாலே உள்ளதெல்லாம்காட்டும். இவ்வஹம்ஶப்தம் கீழ்ச்சொன்னவிடத்தில் ஸௌலப்யாதிகுணோபேதனான நிலையைக்கழித்து ஜ்ஞாநாதிகுணபரிபூர்ணனான நானென்கிறது; அதுக்கடி மேற்சொல்லுகிற பாபவிமோசநத்துக்கு ஜ்ஞாநஶக்த்யாதிகள் அபேக்ஷிதமாகையாலே;

ஆக ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தியாய் அவாப்தஸமஸ்தகாமனாய் நிருபாதிக ஸர்வஶேஷியாய் நிரவதிகதயாவானான நானென்றபடி. (க) "త్వజ్ఞానశక్తికరుణాసుసతీషు నేహ పాపంపరాక్రమితుమర్హతి మామకీనమ్- த்வஜ்ஜ்ஞாநஶக்திகருணாஸுஸதீஷு நேஹ பாபம்பராக்ரமிதுமர்ஹதி மாமகீநம்" என்று ஜ்ஞாநஶக்திக்ருபாதிகளைப் பாபநிவ்ருத்திக்குப் பரிகாரமாகவாழ்வானு மருளிச்செய்தார்.

நிவர்த்தநாதிகாரி ஸ்வரூபமும் நிவர்த்த்யமின்னமென்னுமிடமறிகைக்கும் ஸர்வஜ்ஞனாகவேணும்; (உ) "நெறியெல்லாமெடுத்துரைத்த நிறைஞானத்தொருமூர்த்தி" என்னக்கடவதிறே. அறிந்தபடியேசெய்து தலைக்கட்டுகைக்கு ஸர்வஶக்தியாகவேணும்;

இந்த ஸர்வஶக்தித்வம் (ங)"முழுவதுமகப்படக்கரந்தோராலிலைச்சேர்ந்த" என்று ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களையும் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்த ஶக்தியோகத்திலும் (ச) "பக்கமே கண்டாருளர்" என்று அதீந்த்ரியனான தன்னை இந்த்ரியகோசரனாக்கின ஶக்தியோகத்திலும் (ரு) "எஞ்ஞான்றுமெங்குமொழிவறநிறைந்துநின்ற" என்று அணுபூதவஸ்துக்களிலே விபுவான தான்பரிஸமாப்யவர்த்தித்வரூபஶக்தியோகத்திலும் (சா) "நினைந்தவெல்லாப் பொருள்கட்கும்வித்தாய் முதலிற்சிதையாமே" என்று ஜகத்துக்கு உபாதாநமாகாநிற்கப் பரிணமியாதே காரணமான ஶக்தியோகத்திலும் அதிகமாயிருக்கும்.

அதுக்கடி நித்யஸம்ஸாரியாய் பகவத்விமுகனான சேதநனை *என்னை இசைவித்து நானுமிசைந்தேனென்னும்படி, (எ) "தாமொட்டிவந்தென்தனிநெஞ்சைவஞ்சித்து" என்கிறபடியே இசைவித்து (அ) "ஶ்ரீநிகேதனவிவாதந-தேநசேதவிவாதஃ" என்கிற அவிவாதத்தை யுண்டாக்கிப் பாபவிமோசநம் பண்ணுகைபாலே எதிர்த்தலையை யிசைவிக்கவேணும். அவற்றுக்குத் தன்னிசைவேயமைபும்; ஆகையாலே அவற்றிற்காட்டில் இதுக்காதிக்யமுண்டு;

(க) அதிமாநுஷஸ்த-சுக (உ) தி-வாய்-ச-அ-சு (ங) திருவாசிரி-அ
(ச) பெரி-தி-ச-க-அ (ரு) தி-வாய்-ங-உ-எ (சா) தி-வாய்-க-ரு-உ
(எ) தி-வாய்-க-எ-எ (அ) பார

ஸர்வஶக்தியானாலும் அபூர்ணனாயிருக்குமாகில் ப்ரயோஜநத்திலே நினைவாய் இவன்கார்யம் செய்யக்கூடாது; அது வேண்டாதபடி அவாப்தஸமஸ்தகாமனாயிருக்குமென்கிறது; ஸர்வஜ்ஞனுமாய் ஸர்வஶக்தியுமாய் அவாப்தஸமஸ்தகாமனானாலும் பிறர்கார்யம்செய்யக்கூடாதே; அதுவேண்டாதபடி நிருபாதிகஶேஷியென்கிறது.

ஸர்வஜ்ஞத்வம் அபராதங்களை யறிகைக்கும், ஸர்வஶக்தித்வம் ததநுகுண தண்டதரனாகைக்கும், அவாப்தஸமஸ்தகாமத்வம் சிலவற்றைக்கொடுத்துக் கழித்துக்கொள்ளவொண்ணாமைக்கும், ஸர்வஸ்வாமித்வம் இப்படிச் செய்யாநின்றால் நிவாரகரில்லாமைக்கும் உறுப்பாயிறே இதஃபூர்வம்போந்தது; இப்போது அவற்றைக்கழித்து ஸர்வஜ்ஞத்வத்தை ரக்ஷணவிதியிலும் ஸர்வஶக்தித்வத்தை ரக்ஷணவ்யாபாரத்திலும்அவாப்தஸமஸ்தகாமத்வத்தை ப்ரயோஜநநிரபேக்ஷரக்ஷணத்திலும் ஸ்வாமித்வத்தைத் தன்பேறாகச்செய்கையிலும் உபயுக்தமாக்குகைக்கு பரதுஃக்காஸஹிஷ்ணுதாலக்ஷணமான பரமதயை வேணும்; இதுக்காக நிருபாதிகதயாவானாகவிருக்குமென்கிறது;— ஆக க்ருபாஸஹக்ருதமான ஜ்ஞாநஶக்த்யாதிகுணங்களே இவனுக்கு உஜ்ஜீவநஹேதுவாவது;

(க) "விதிவாய்க்கின்றுகாப்பாரார்" (உ) "சேமம்செங்கோனருளே" (ங) "ஆழியானருளேநன்று" என்றும், (ச)"துணியேனினிநின்னருளல்லது" என்று மாழ்வார்களருளிச்செய்தார்கள். (ரு)"కృపయా కేవలమాత్మసాత్కురు-க்ருபயாகேவலமாத்மஸாத்குரு" (சு) "కేవలం మదీయయైవ దయయా-கேவலம்மதீயயைவதயயா" (எ) "కృపయాశరణం భవ-க்ருபயாஶரணம்பவ" (அ) "దయస్వమాంగుణమయరజ్ఞమన్దిర-தயஸ்வமாம்குணமயரங்கமந்திர" (கூ) "దేహిమేకృపయానాథ-தேஹிமேக்ருபயாநாத" இத்யாதிகளாலே க்ருபையே உத்தாரகமென்னுமிடத்தை ஆசார்யர்களுமருளிச்செய்தார்கள்.

ஆக, இந்த ஸர்வஜ்ஞத்வாதி குணங்கள் இவ்வஹமர்த்தத்திலே அநுஸந்தேயங்கள். இவைசேதநனுடைய அநந்யஸாதநத்வ வ்யவ

---

(க) தி-வாய்-ரு-க-க (உ) திருவிருத்தம்-உஎ (ங) தி-மொ-க-க-ச
(ச) தி-மொ-கக-அ-அ (ரு) ஸ்தோ-ர (சு) ஶரணாகதிகத்யம்
(எ) (அ) ர-ஸ்த (கூ) ஶ்ரீரங்ககத்ய

ஸாயத்துக்கு மடியாய் ஈஶ்வரனுடைய விரோதிநிரஸநத்துக்குப் பரிகரமுமாயிருக்கும்.

"மாம்"என்று தன் ஸௌலப்யத்தைக் காட்டினான். "அஹம்" என்று பரத்வத்தைக் காட்டுகிறான். "மாம்" என்கிற நிலையிலே *தேர்மன்னர்க்காயன்று தேரூர்ந்தஸௌலப்ப்யம் தோற்றும். "அஹம்" என்கிற நிலையிலே * தார்மன்னர்தங்கள்தலைமேலான பரத்வம்தோற்றும்; "மாம்" என்று (க) "பற்றலர்வீயக்கோல்கையிற்கொண்டு பார்த்தன்தன்தேர்முன்னின்றான்" என்று, *கொல்லாமாக்கோலான வுளவுகோலும், கையுமானநிலையைக் காட்டினான். அஹமென்று (உ) "வெள்ளைவிளிசங்குவெஞ்சுடர்திருச்சக்கரமேந்துகையன்" என்று கையும் திருவாழியுமான வேஷத்தைக்காட்டுகிறான்; "ஸர்வதர்மாந்பரித்யஜ்யமாம்" என்கையாலே "மாம்"என்று தர்மநிவர்த்தகமான வேஷத்தைக்காட்டினான்; "அஹம்ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" என்கையாலே அஹமென்று அதர்மநிவர்த்தகமான வேஷத்தைக் காட்டுகிறான். "மாம்" என்று ஶரணமென்கிறவுக்தியும் ஸஹியாதநிரபேக்ஷமான நிலையாகையாலே உக்திக்கு விபரீதமான நிலையைச்காட்டினான்; "அஹம்" என்று பாபவிமோசகத்வத்தாலே அநுஷ்டாநத்துக்கு விபரீதமானநிலையைக் காட்டுகிறான்; "அஹம்மோக்ஷயிஷ்யாமி" என்கையாலே பந்தகனானநானே விமோசகனானால் வேறுநிவாரகருண்டோவென்று தன்னுடைய ஸமாப்யதிகராஹித்யத்தைச் சொல்லுகிறான்.

ஆக, ஸர்வஜ்ஞனுமாய் ஸர்வஶக்தியுமாய் அவாப்தஸமஸ்தகாமனுமாய் ஸர்வஸ்வாமியுமாய் பரமதயாவானுமான நானென்றதாயிற்று.

அநந்தரம், "த்வா" என்று நிவர்த்த்யபாபாஶ்ரயபூதனாய், நிவ்ருத்த்யுபாயத்தைப்பற்றி அவன்பக்கலிலே ஸர்வப(ா)ரங்களையும் ந்யஸித்து விமுகவ்யாவ்ருத்தி ஸூசகமான ப்ரபத்தியையுடையனாய் பாபநிவ்ருத்த்யவஸர ப்ரதிக்ஷகனான வதிகாரியைச்சொல்லுகிறது.

"ஸர்வதர்மாந்பரித்யஜ்யமாம்ஶரணம்வ்ரஜ" என்று விதித்தப்ரகாரத்திலே ஸாதநாந்தரங்கள் நமக்கு ஸாதநமன்றென்கிற ப்ரதி

(க) தி-மொ-உ-ரு-க      (உ) பெரி-தி-சு-க-எ

பத்திவிஶிஷ்டனும், தத்ஹேதுவான ஸ்வரூபபாரதந்த்ர்யஜ்ஞாநவா வானும், தத்தேதுவான விஶ்வஸ்ரக்ஷத்வப்ரதிபத்தியையுடைய னும் தத்கார்யமான பகவதேக ஶேஷத்வஜ்ஞாநத்தையும் தத்பர்ய வஸாநபூமியான ததீயஶேஷத்வஜ்ஞாநத்தையுமுடையனும், புரு ஷார்த்தாந்தரங்களில்விமுகனும்,ஸ்வீகாரத்தில் உபாயத்வபுத்தியை ஸவாஸநபரித்யாகம்பண்ணி, (க)"𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌭𑌜𑌨𑌸𑌮𑍍𑌪𑌦𑌕𑌿𑌞𑍍𑌚𑌨𑍋𑌽𑌹𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌧𑌿𑌕𑌾𑌰𑌶𑌕𑌨𑌾𑌨𑍁𑌶𑌯𑌾𑌨𑌭𑌿𑌜𑍍𑌞𑌃-ஜ்ஞாநக்ரியாபஜநஸம்பதகிஞ்சநோஹமிச்சா திகாரஶகநாநுஶயாநபிஜ்ஞ:" இத்யாதிகளிற்படியே ஸாதநாந்தரங் களிலநந்வயத்தாலே அகிஞ்சநனும், அவற்றிலிச்சையுமின்றிக்கே, அதிகாரமுமின்றிக்கே அஜ்ஞாநாஶக்திகளையும் அப்ராப்தியையு மநுஸந்தித்து அத்தாலே தத்விஷயமான அநுஶயமுமின்றிக்கே வித்தோபாயப்ரதிபத்த்யநுவ்ருத்தியும் ஸாதநாந்தரஸமாநமாக வநு ஸந்தித்திருப்பானும், ஆகவிப்படி த்யாகஸ்வீகாரவிஶிஷ்டனைக் கொண்டுஸர்வஸுலபனனவென்னைபே நிரபேக்ஷோபாயமாகப்பற்றி க்ருதக்ருத்யனாய் நிற்கிறவுன்னை யென்றபடி.

"அஹம்"என்கிறவிடத்தில் ஸர்வஜ்ஞத்வாதிகுணவிஶிஷ்டனும் உபாயபூதனனவனுடைய ஸ்வேதரஸகலஸாதநாந்தர நைரபேக்ஷ்யத் தாலும் "த்வா" என்கிறவிடத்தில் அஜ்ஞாநாஶக்திகளையும் அப் ராப்தியையுமுடையனுப்கொண்டு பரித்யக்தஸமஸ்தஸாங்கஸாத நனவதிகாரியினுடைய வாகிஞ்சந்யத்தாலும், இந்தரக்ஷ்யரக்ஷகபா வத்தினுடைய ஸௌஸாத்நுஶ்யம் தோற்றுகிறது.

ஏவம்பூதனன வதிகாரியினுடைய க்ருதக்ருத்யதையை (உ) "𑌤𑌸𑍍𑌯𑍈𑌵𑌂𑌵𑌿𑌦𑍁𑌷𑌃-தஸ்யைவம்விதுஷ:"என்கிறவநுவாகத்தாலேசொல் லிற்று. "ஏவம்விதுஷ:" என்று ஸத்யம், தபஸ்ஸு, தமம்முதலாக யஜ்ஞம்முடிவாக கர்மயோகத்தைச்சொல்லி, "மாநஸம்" என்று ஜ்ஞாநயோக பக்தியோகங்களைச் சொல்லி இவற்றை யொன்றுக் கொன்று உத்க்ருஷ்டமாகச் சொல்லி, எல்லாத்துக்கும் மேலாக "𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇𑌤𑍍𑌵𑌾𑌮𑌹𑌸𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂𑌯𑍁𑌞𑍍𑌜𑍀𑌤 - ப்ரஹ்மணேத்வாமஹஸஓமி த்யாத்மாநம்யுஞ்ஜீத" என்று ஶ்ரிய:பதியாய் ஸமஸ்தகல்யாணகுணா த்மகனுய்ஸர்வஸ்வாமியான நாராயணன் திருவடிகளிலே ஆத்மாத்மா

---

(க) ந்-ஸ்த-உ-௮௯ (உ) தை-நா

ஆத்மாத்மீயங்களில்(ள்)பரஸமர்ப்பணமாகிற ப்ரபத்தியை ந்யாஸஶப்தத்தாலே சொல்லி, "தாநி வா ஏதாந்யவராணி தபாம்ஸி-தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:" என்று அந்தப்ரபத்தியை ஸத்யதபாதிகளான ஸாதநாந்தரங்களில் அதிகமாகச்சொல்லி, இப்படிக் கீழ் அநுவாகத்வயத்திலும் சொன்ன ஸாதநாந்தரநிவ்ருத்திபூர்வகமான விஹிதோபாயபரிக்ரஹத்தை "ஏவம்விது:" என்றுசொல்லி "தஸ்ய" என்று இந்த ஶரணாகதிஸ்வரூபத்தை யதாவாக வநுஸந்தித்தசேதநனுக்கு ஸ்வீக்ருதந்யாஸரூபஸாதநவைபவத்தாலே ஸர்வகர்மாநுபூர்த்தியையும் சொல்லிற்று.

"ஆத்மா யஜமாந:" என்றுதொடங்கி "ஶ்ரோத்ரமக்நீத்" என்று முடிவாக ஶரணாகதிஜ்ஞாநவானான புருஷனுடைய ஆத்மாத்மீயங்களை யாகோபகரணமாகவகுத்து இத்தை யாகரூபமாகச்சொல்லி, "யாவத்த்ரியதே ஸா தீக்ஷா" என்றுதொடங்கி, "ஸர்வவேதஸம்வா ஏதத் ஸத்ரம்" என்று முடிவாக இவனுடைய ஶரீரஸ்திதியுள்ளவளவும் தீக்ஷையாகச்சொல்லி இவனுடைய ஸ்திதிகமநஶயநாதிவ்யாபாரங்களாலே ஸர்வகர்மங்களினுடையவும் ஸித்தியாகச்சொல்லி, "யந்மரணம் ததவப்ருதம்" என்று இந்த யாகத்துக்கு அவப்ருதம் இவனுடைய ஶரீரவிமோசநமாகச் சொல்லி "ய ஏவம்வித்வாநுதகயநே ப்ரமீயதே" என்றுதொடங்கி "ப்ரஹ்மணோ மஹிமாநமாப்நோதி" என்று இறுதியாக அர்ச்சிராதிமார்க்ககமநமும், ஆதிவாஹிகஸத்காரமும், ஆவரணலங்கநமும் விரஜாஸ்நாநமும் ஸூக்ஷ்மஶரீரவிதூநநமும் அபஹதபாப்மத்வாதிகுணாஷ்டகாவிர்ப்பாவமும், அப்ராக்ருதவிக்ரஹபரிக்ரஹமும், அகாலகால்யமான திவ்யதேஶப்ராப்தியும், ஐரம்மதீயதிவ்யஸர:ப்ராப்தியும், திவ்யாப்ஸரஸ்ஸுக்களுடைய அப்ராக்ருதாலங்காரமும், திவ்யகோபுரப்ராப்தியும், அநந்தகருடாதிஸூரிபரிஷத்ப்ரத்யுத்கமநமும் ராஜமார்க்ககமநமும் ப்ரஹ்மவேஶ்மப்ரவேஶமும், அப்ராக்ருததிவ்யமண்டபப்ராப்தியும் பரமாத்மதர்ஶநமும், பரமபுருஷஸ்துதிப்ரணாமாதிகளும், தத்ஸமீபப்ராப்தியும், பர்யங்காரோஹணமும், பகவதுத்ஸங்காஸநமும், ஆலோகாலாபாலிங்கநாதிகளும் ஸ்வரூபகுணவிக்ரஹாத்யநுபவமும், அநுபவஜநிதப்ரீத்யதிஶயமும், ப்ரீதிப்ரேரிதாநேகவிக்ரஹபரிக்ரஹமும் ஸர்வதேஶாதிவிஶிஷ்டஸர்வப்ரகாரகைங்கர்யப்ராப்தியும் கைங்கர்யஜநிதபகவந்

முகேசால்லாஸாநுபவமுமாகிற புருஷார்த்தலாபத்தைச் சொல்லிற்று.

(க) "విదుఃకృష్ణం బ్రాహ్మణాస్తత్త్వతో యే తేషాం రాజన్ సర్వయజ్ఞాస్సమాప్తాః-விதுஃக்ருஷ்ணம்ப்ராஹ்மணாஸ்தத்வதோயேதேஷாம்ராஜந்ஸர்வயஜ்ஞாஸ்ஸமாப்தாஃ" என்றும், (உ) "కృషిర్భూవాచకశ్శబ్దః-க்ருஷிர்ப்பூவாசகஶ்ஶப்தஃ" இத்யாதிப்படியே ஸத்தாதாரகனும் மோக்ஷப்ரதனுமான க்ருஷ்ணனையே நிருபாதிகரக்ஷகனாக வறிந்தவர்கள் ஸர்வயஜ்ஞங்களும் பூர்ணமாக வநுஷ்டித்தார்களென்று சொல்லிற்று.

(௩) "కృతాన్యేవ సర్వాణి తేన తప్తాని వై తపాంసి సర్వతీర్థాని యజ్ఞాస్సర్వదానాని చక్షుణాత్ । కృతాన్యేవ మోక్షశ్చ తస్య హస్తే న సంశయః-க்ருதாந்யநேக ஸர்வாணிதபாம்ஸிதபதாம்வர । ஸர்வேதீர்த்தாஸ் ஸர்வயஜ்ஞாஸ் ஸர்வதாநாநிசக்ஷுணாத் । க்ருதாந்யநேகமோக்ஷஶ்சதஸ்யஹஸ்தேநஸம்ஶயஃ" என்று இந்தவுபாயஜ்ஞாநமுள்ள புருஷனைக் கீழ்ச் சொல்லி அவனாலே எல்லாதபஸ்ஸுக்களும் பண்ணப்பட்டன; ஸர்வயஜ்ஞங்களும் பண்ணப்பட்டன; எல்லா தீர்த்தஸ்நாநங்களும் பண்ணப்பட்டன; ஸர்வதாநங்களும் பண்ணப்பட்டன; மோக்ஷம் அவன் கையிலே; இவ்வர்த்தத்தில்ஸந்தேஹமில்லையென்று சொல்லிற்று.

(௩) "యాని నిశ్శ్రేయసార్థాని చోదితాని తపాంసి వై । తేషాం తు తపసాం న్యాసమతిరిక్తం తపశ్శ్రుతమ్-யாநிநிஶ்ஶ்ரேயஸார்த்தாநிசோதிதாநிதபாம்ஸிவை । தேஷாந்துதபஸாம்ந்யாஸமதிரிக்தம் தபஶ்ஶ்ருதம்" என்று மோக்ஷஸாதநமாக ஶாஸ்த்ரங்களிலே சொல்லப்பட்ட தபஸ்ஸு முதலான ஸாதநங்களெல்லாவற்றிலும் ந்யாஸமென்கிற ஸாதநமே உத்க்ருஷ்டஸாதநமென்றும்சொல்லி, "సమిత్సాధనకాదీనాం యజ్ఞానాం న్యాసమాత్మనః । నమసా యోఽకరోద్దేవే స స్వధ్వర ఇతీరితః ॥ యాగసాధనభూతేన స్వాత్మనా చేజ్యమీశ్వరమ్ । అయజత్తాని ధర్మాణి ప్రథమాని చ శ్రుతమ్-ஸமித்ஸாதநகாதீநாம் யஜ்ஞாநாம் ந்யாஸமாத்மநஃ । நமஸாயோகரோத்தேவேஸஸ்வத்வர இதீரிதஃயாகஸாதநபூதேநஸ்வாத்மநாசேஜ்யமீஶ்வரம் । அயஜத்தாநிதர்மாணிப்ரதமாநிசஶ்ருதம்" இத்யாதியாலே ஸமிதாதிஸாதநங்களாலே பண்ணப்படுவதான யஜ்ஞங்களெல்லாவற்றிலுங்காட்

(க) பாத-அது. (உ) (௩)

மல் ஸர்வேஶ்வரன் பக்கலிலே ஆத்மபரந்யாஸம்பண்ணியிருக்கு மதுவே நல்லயஜ்ஞமாவதென்றும், யாகஸாதநபூதனான தன்னாலே இஜ்யனான ஸர்வேஶ்வரனை யஜிக்குமது ப்ரதாநதர்மமென்றும் சொல்லிற்றிறே;

ஏவம்ரூபமான ஶரணவரணம்பண்ணிக்ருதக்ருத்யனானவதிகாரிக்கு (௧) "కిమహంసాధు నాకరవమ్, కిమహంపాపమకరవమ్-கிமஹம்ஸாது நாகரவம், கிமஹம் பாபமகரவம்" என்கிற ந்யாயத்தாலே புண்யகர்மங்கள்பண்ணாதிருந்தோமே, பாபகர்மங்கள் பண்ணினோமேயென்கிறபயமில்லை. உபாயத்வேநவரணீயனான விஶ்வாஸன் (௨) "స్మరామి-ஸ்மராமி" என்கிறபடியே இவனுக்கபேக்ஷிதஸகலக்ருத்யங்களும் நிர்வஹித்துக்கொண்டுபோருமாகையாலே இவனுக்குக்கர்த்தவ்யம்ஸ்வநிர்ப்பரத்வாநுஸந்தாநம் பண்ணிக்கொண்டிருக்கையும் வாஸநாநிபந்தநமாகப்பிறந்ததப்புக்களுக்கு உபாயத்திற்பண்ணின விஶ்வாஸாதிஶயத்தாலே நிர்ப்ப(ஶ்ரு)ரனாயிருக்கையும்.

ஆக "த்வா" என்று த்யாகஸ்வீகாரவிஶிஷ்டனான வுன்னையென்று ஸ்வீகர்த்தாவான வதிகாரிவிஶேஷத்தைச் சொல்லிற்று; மேல்ஸ்வீகார்யவஸ்துக்ருத்யத்தையும் ஸ்வீகர்த்ருக்ருத்யலேஶத்தையும் சொல்லுகிறது.

"அஹம்" என்று நிவர்த்தகஸ்வரூபம்சொல்லி "த்வா"என்று நிவர்த்த்யாஶ்ரயம் சொல்லி, அநந்தரம் "ஸர்வபாபேப்ய:" என்று நிவர்த்த்யஸ்வரூபம் சொல்லுகிறது. (ஸர்வபாபேப்ய:) பாபமும் பஹுவசநமும் ஸர்வஶப்தமுமாய், இதுவும் த்ரிப்ரகாரமாயிருக்கும்; பாபஶப்தத்தாலே அநர்த்தரூபது:க்கபலஹேதுவானவற்றைச் சொல்லுகிறது. அதில் நரகபலஹேதுவான கேவல பாபத்தைச் சொல்லுகிறதன்று; பந்தகமாகையாலே புண்யபாபரூபமான உபயவிதகர்மத்தையும் சொல்லுகிறது: அதுக்கடி மோக்ஷவிரோதி ப்ரகரணமாகையாலே;

(௩) "తత్సుకృతదుష్కృతే విధూనుతే-தத்ஸுக்ருததுஷ்க்ருதே விதூநுதே" (௪) "పుణ్యపాపే విధూయ-புண்யபாபே விதூய" (௫) "సుహృదస్సా

(௧) தை. (௨) வராஹசரம (௩) கௌஷீ ௧-௪-௪
(௪) முண்ட-௩-௧-௩ (௫)

ధుకృత్యామ్, ద్విషన్తః పాపకృత్యామ్-ஸுஹ்ருதஸ்ஸாதுக்ருத்யாம் த்விஷந்தஃபாபக்ருத்யாம் (க) "తస్య ప్రియా జ్ఞాతయస్సుకృతముపయన్తి, అప్రియా దుష్కృతమ్ - தஸ்யப்ரியாஜ்ஞாதயஸ்ஸுக்ருதமுபயந்தி, அப்ரியாதுஷ்க்ருதம்" இத்யாதிகளாலே ஸுக்ருதஶப்தவாச்யமான புண்யத்துடன் துஷ்க்ருதஶப்தவாச்யமான பாபத்துடன்வாசியற இரண்டையுமுதறிப்போகடுமென்றும், ஸுக்ருதத்தை இவனிருந்தநாளில் இவன்பக்கலநுகூலித்தார்பக்கலிலும், துஷ்க்ருதத்தை இவன்பக்கல் ப்ராதிகூலித்தார்பக்கலிலும் பகிர்ந்திடுமென்றும் சொல்லுகையாலே உபயமும் பாபஶப்தவாச்யமாய் நிவர்த்த்யகோடியிலே புகுமன்றோ.

ஆழ்வாரும், (௨) "சார்ந்தவிருவல்வினைகளும் சரித்து"என்று எள்ளிலெண்ணெய்போலவும் அரணியில்அக்நிபோலவும் விடாமற் பொருந்தியிருப்பதாய் ஸர்வஶக்தியாலும் விவேகிக்கவரிதாம்படி வலிதாயிருக்கிற புண்யபாபரூபத்தாலே உபயவிதமானகர்மங்களை விரகர்கெடுஞ்சுவர்தள்ளுமாப்போலே தள்ளியென்றாரிறே; "வீடுதிருத்துவான்" என்கிற மோக்ஷப்ரகரணமாகையாலே ஐஹிகமானபுத்ரபஶ்வந்நாதிரூபபலஹேதுவானபுண்யத்துடன் ஆமுஷ்மிகமான ஸ்வர்க்காதிபலஹேதுவான புண்யத்துடன் தாபத்ரயாத்யநுபவஹேதுவானபாபத்துடன் ரௌரவாதிநரகஹேதுவானபாபத்துடன் வாசியற எல்லாவற்றையும் பாபஶப்தத்தாலே சொல்லுகிறது.

ஆக, பாபஶப்தத்தாலே ஸாம்ஸாரிகஸகலதுக்கஹேதுவாய் நிரதிஶயாநந்தரூப பகவத்ப்ராப்திக்கும் ப்ரதிபந்தகமான ஸகலகர்மங்களையும் சொல்லிற்று; ஸ்வரூபவிரோதியாயும் ஸாதநவிரோதியாயும் ப்ராப்யவிரோதியாயும் ப்ராப்திவிரோதியாயும் சதுர்விதமாயிறே விரோதிதானிருப்பது. அதில் ஸ்வரூபவிரோதி ப்ரணவத்திலேமத்யமபதத்தாலும் திருமந்த்ரத்தில் மத்யமபதத்தாலும் நிவ்ருத்தமாயிற்று. ஸாதநவிரோதி இப்ஶ்லோகத்தில் ப்ரதமபதத்தாலும் த்விதீயபதத்தாலும் சதுர்த்தபதத்தாலும் நிவ்ருத்தமாயிற்று. ப்ராப்யவிரோதி-த்வயத்தில்சரமபதத்தாலே நிவ்ருத்தமாயிற்று. ப்ராப்திவிரோதி † (நிவ்ருத்தி) சொல்லுகிறது இப்பதத்தாலே.

---

(௧) (௨) தி-வாய்-௧-௫-௰ † குண்டலிதம்வாசிக்கம்

இதில் பஹுவசநத்தாலே ப்ராப்திவிரோதிபாஹுள்யத்தைச் சொல்லுகிறது. அவைபாவன;—அவித்யாகர்மவாஸநாருசிப்ரக்ருதி ஸம்பந்தங்கள். அவித்யையாகிறது-அஜ்ஞாநம்; அதுதான் ஜ்ஞாநாநுதயாந்யதாஜ்ஞாநவிபரீதஜ்ஞாநரூபேண த்ரிவிதமாயிருக்கும்; ஜ்ஞாநாநுதயமாவது - ஒருபதார்த்தவிஷயமாக வொரு ஜ்ஞாநமும் உதியாமை; அந்யதாஜ்ஞாநமாவது-பதார்த்தவிஷயமானஸ்வபாவத்தை அந்யதாவாக க்ரஹிக்கை, ஸம்ப்ரதிபந்நமாகஸ்வேதமானயூபத்தைப்ரீதமாகக்ரஹிக்குமாபோலே. விபரீதஜ்ஞாநமாவது-பதார்த்தஸ்வரூபத்தை விபரீதமாகக்ரஹிக்கை: ரஜ்ஜுவில்ஸர்ப்பபுத்திபோலே; அதாவது-ஆத்மாவென்று ஒருவஸ்துவுண்டென்றறியாமையும், ஆத்மாவுண்டென்றறிந்தால் அவனை ஸ்வதந்த்ரனாகநினைக்கையும், ஆத்மாவாகிறது-தேஹந்தானென்றறிகையும்.

கர்மமாவது-அக்ருத்யகரணக்ருத்யாகரண பகவதபசாரபாகவதாபசாராஸஹ்யாபசாரரூபமாகவும், புண்யபாபரூபமாகவும், பாதகம்அதிபாதகம்மஹாபாதகம்துடக்கமான விசேஷங்களாலேபஹுவிதமாய், பூர்வாகோ(ஷோ)த்தராகரூபமாயுமிருக்கும்;- அக்ருத்யகரணமாவது-சாஸ்த்ரங்களில் அவிஹிதமானவற்றைச்செய்கை;க்ருத்யாகரணமாவது-விஹிதமானவற்றைச்செய்யாதொழிகை. பகவதபசாரமாவது-பகவதர்ஹமானத்ரவ்யங்களைத்தான் ஜீவிக்கையும்,ஜீவிப்பார் பக்கலிலேஸாபேக்ஷனாயும் அயாசிதமாகவும் யாசிதமாகவும் ஜீவிக்கையும், அர்ச்சாவதாரத்தில் உபாதாநஸ்ம்ருதி, ஸர்வஸ்மாத்பரனை ஸர்வேச்வரனை தேவதாந்தரங்களோடு ஸமமாகநினைக்கையும், அவனதானவாத்மாத்மீயங்களைத்தன்னதாக நினைத்திருக்கையும்முதலானவை. பாகவதாபசாரமாவது-அர்த்தகாமாபி(ஹி)மாநாதிகளடியாகஸ்ரீவைஷ்ணவர்களோடேத்வேஷம்பண்ணுகையும்,ஜ்ஞாநாதிகரானவவர்விஷயத்தில் ஜ்ஞாநத்வாராஉபாதேயரென்று காண்கையன்றிக்கேஜந்மவ்ருத்தங்களையிட்டுக்குறையநினைக்கையும்,†விலக்ஷணர்பக்கலிலே க்ஷேபோக்திபண்ணுகையும் அவர்கள்பக்கலிலே ஸஜாதியபுத்தியும் முதலானவை; அஸஹ்யாபசாரமாவது- பகவத்பாகவதவிஷயமான உச்ச்ராயங்கள்கண்டால் அஸஹமானனாய்க்கொண்டு அதிவ்ருத்திபண்ணுகை.

---

† "விகலகரணர்" என்று பாடாந்தரம்.

ப்ரக்ருதிஸம்பந்தமாவது - தேவதிர்யங் மநுஷ்யஸ்தாவரரூபமான சதுர்விதஶரீரஸம்பந்தம்; இவையடியாகவரக்கடவதானராகத்வேஷம்முதலானவை. ருசிவாஸனைகளாவன-குணதாரதம்யத்தாலே யிந்தவஜ்ஞாநாதிகளைப்பற்றிவரக்கடவதான ருசியும் அவற்றைப் பற்றிவருகிறவநாதிவாஸனையும்; ஆழ்வாரும், (க) "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பும்" என்றுப்ரதாநமான வஜ்ஞாநாஸத்ப்ரவ்ருத்திதேஹஸம்பந்தங்களை யருளிச்செய்து "இந்நின்றநீர்மை" என்று தத்கதமானருசிவாஸனைகளை யருளிச்செய்து "இனியாமுறாமை" என்று அவைதான் பகவந்நிவர்த்யமாகவருளிச்செய்தாரிறே;

ஆக,"பாபேப்ய:" என்றபஹுவசநத்தாலே ப்ராப்திவிரோதி ஸகலபாபங்களையும்சொல்லிற்று. ஆகவிவ்வளவாலே ஸாதநாந்தரநிஷ்டனுடன் வித்தஸாதநநிஷ்டனுடன்வாசியற ஸாதாரணமாக நிவர்த்திப்பிக்கப்படும் பாபங்களைச்சொல்லிற்று.

அநந்தரம் ஸர்வஶப்தத்தாலேவித்தஸாதநநிஷ்டனுக்கு விஶேஷநிவர்த்யமானபாபத்தைச்சொல்லுகிறது. அதாவது-(உ)"తదధిగమ ఉత్తరపూర్వాఘయోరశ్లేషవినాశౌ, తద్వ్యపదేశాత్,""ఇతరస్యాప్యేవమశ్లేషః- ததநிகம உத்தரபூர்வாகயோரஶ்லேஷவிநாஶௌ, தத்வ்யபதேஶாத்," "இதரஸ்யாப்யேவமஶ்லேஷ:" என்று பூர்வாகத்துக்கு அஶ்லேஷத்தையும், ப்ராமாதிகமாகப்பிறந்தஉத்தராகத்துக்குவிநாஶத்தையும்சொல்லிவைத்து, "భోగేనత్వితరే క్షపయిత్వాథసమ్పద్యతే-போகேநத்விதரேக்ஷபயித்வாதஸம்பத்யதே" என்று அந்த பூர்வோத்தராகங்களையொழிந்தப்ராரப்தகார்யமானபுண்யபாபரூபகர்மங்கள் ஸாதநாந்தரநிஷ்டனுக்கு அநுபவவிநாஶ்யமாயிருக்குமென்றுசொல்லிற்று. வித்தஸாதநநிஷ்டனுக்கு அப்படியன்றிக்கே ப்ராரப்த (ங) மும்ஸர்வஶப்தவாச்யமாய்க்கொண்டு நிவர்த்யமாமென்கிறது.

அதுக்கடி - பாபஶப்தோபபதமானஸர்வஶப்தத்தாலே; நிவர்த்யாபஶத்தைச்சொல்லுமாகையாலே, ஸர்வஶப்தந்தனக்குஸங்கோசமில்லாமையாலும்,"மாஶுச:"என்கிறஶோகநிவ்ருத்தி-பாபங்களினுடைய நிரவஶேஷத்யாகத்திலல்லதுகூடாமையாலும் ப்ராரப்த-

(க) திருவிருத்தம்-க (உ) ப்ரஹ்ம ஸூ-ஔ.

மும்ஸர்வஶப்தவாச்யமாகக்கடவது; (க) "సాధనంభగవత్ప్రాప్తౌసఏవేతిస్థిరామతిః। సాధ్యభక్తిస్సృతాసైవప్రపత్తిరితిగీయతే। ఉపాయోభక్తిరేవేతితత్ప్రాప్త్యౌయాతుసామతిః। ఉపాయభక్తిరేతస్యాః పూర్వోక్తైవగరీయసీ॥ ఉపాయభక్తిఃప్రారబ్ధవ్యతిరిక్తాఘనాశినీ। సాధ్యభక్తిసుసా హన్త్రీ ప్రారబ్ధస్యాపిభూయసీ-ஸாதநம்பகவத்ப்ராப்தௌஸவேவேதிஸ்திராமதி:।ஸாத்யபக்திஸ்ஸ்ம்ருதாஸைவப்ரபத்திரிதிகீயதே।உபாயோபக்திரேவேதிதத்ப்ராப்தௌயாதுஸாமதி:। உபாயபக்திரேதஸ்யா: பூர்வோக்தைவகரீயஸீ।உபாயபக்தி:ப்ராரப்தவ்யதிரிக்தாகநாஶிநீ। ஸாத்யபக்திஸ்துஸாஹந்த்ரீ ப்ராரப்தஸ்யாபி பூயஸீ." என்று பகவத்ப்ராப்திக்குபகவத்விஷயமேஸாதநமென்கிற நினைவுக்கு ஸாத்யபக்தியென்றுபேர் ; அதுப்ரபத்தியென்று சொல்லப்படும்; பகவத்ப்ராப்த்யுபாயம் பக்தியென்கிறநினைவுக்கு உபாயபக்தியென்றுபேர். இதிற்காட்டில் பூர்வோக்தையான ப்ரபத்தியே ஶ்ரேஷ்டை; உபாயபக்தியானபக்தியோகம் ப்ராரப்தவ்யதிரிக்தங்களானபாபங்களைப்போக்கும்; ஸாத்யபக்தியான ப்ரபத்தியோகம் ப்ராரப்த(ப)நுபபாபத்தையும்போக்குமென்றுசொல்லுகையாலும், ப்ரபத்தி-ப்ராரப்தவிநாஶிநியென்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம் ;

ஆனால் ப்ரபந்நனுக்கு துக்கஹேதுவான ப்ராரப்தஶேஷம் அநுபவிக்கவேண்டுவானேனென்னில், ப்ராரப்தகர்மநிபந்தநஶோகமொழிய ப்ராரப்தஶரீரவிஷயமானஶோகமில்லாமையாலே; உண்டாயிற்றதாகில் அப்போதேநஶிக்கும்; ஆகையிறேபாஷ்யகாரர் "ఆరబ్ధకార్యాననారబ్ధకార్యాంశ్చసర్వానపతః క్షమస్వ-ஆப்தகார்யாநநாரப்தகார்யாம்ப்சஸர்வாநஶேஷத:க்ஷமஸ்வ" என்றுப்ராரப்தமும் ப்ரபத்தவ்யனான பகவான்க்ஷமிக்கத்திருமாகவருளிச்செய்தது;

ஶாண்யனானவீஶ்வரனும் (உ) [స్మర్తామివిశ్వరూపఞ్చమామజమ్।తతస్తంమ్రియమాణన్తు కాష్ఠపాషాణసన్నిభమ్। అహంస్మరామిమద్భక్తం నయామిపరమాంగతిమ్] "ஸ்மர்த்தா" என்று மாநஸமானப்ரபத்தியைச் சொல்லி, "தத:" என்று-அதினுடைய நைரந்தர்யத்தைக்கழித்து "ம்ரியமாணம்" என்று ஶரீராவஸாநத்திலே பலமாகச்சொல்லி, தத்ஶப்தத்தாலே ஸாதகனிற்காட்டில் ப்ரபந்நனுக்கு வாசியென்னுமிடத்தை ஸூசிப்பித்து "காஷ்டபாஷாணஸந்நிபம்" என்று அந்திமஸ்

(க) பகவச்சாஸ்த்ரம். (உ) வராஹசரமம்

ம்ருதியும் அநபேக்ஷிதமென்று, "அஹம்ஸ்மராமி" என்று அந்திமஸ்ம்ருதியையும்தானேஏறிட்டுக்கொண்டு, "மத்பக்தம்" என்று அவனுடைய அந்தரங்கதையைச்சொல்லி "பரமாம்கதிம்நயாமி" என்று தானே ஆதிவாஹிகனுமாய்க்கொண்டு தேஶவிஶேஷத்தைப்ராபிப்பிக்கையாலே இவனுக்கு ப்ராரப்தகர்மமநுபவிக்கவேண்டாமென்னுமிடத்தை யருளிச்செய்தான்;

(க) "నావిరతో దుశ్చరితాన్నాశాన్తో నాసమాహితః । నాశాన్తమానసో వాపి ప్రజ్ఞానేనైవమాప్నుయాత్ - நாவிரதோ துஶ்சரிதாந்நாஶாந்தோ நாஸமாஹித:। நாஶாந்தமாநஸோவாபி ப்ரஜ்ஞாநேநைவமாப்நுயாத்" என்று-துஷ்கர்மங்களில்நின்றும் நிவ்ருத்தனன்றாகிலும் இந்தப்ரபத்திஜ்ஞாநத்தாலேஜ்ஞாநலாபமுண்டாகக்கடவதென்றுசொல்லிற்று. ஆகையாலே ப்ராரப்தகர்மமும் ஸர்வஶப்தவாச்யமாகக்கடவது.

அதுக்குமேலே "ஸர்வதர்மாந்" என்று த்யாஜ்யத்வேநவிஹிதமானதர்மங்களில்உபாயத்வபுத்தியின்றிட்டிற்றாகில் அதுவும் ஸர்வஶப்தவாச்யமாகக்கடவது; அதுக்கடி ஸாதநாந்தரஸத்பாவப்ரதிபத்தியும் அத்யந்தாபாவமாகவேணுமென்று பரிஶப்தத்தாலே சொல்லுகையாலே, ஸதாசார்யோபதிஷ்டஜ்ஞாநனாய் பகவத்ஸமாஶ்ரயணம்பண்ணினவநந்தரம் கர்மஹேதுசரீரஸ்தனாகையாலே அந்தகர்மப்ராபல்யத்தாலும் அநாதிவாஸநாநிபந்தநமாகபுத்திபூர்வகமாகவும் ப்ராமாதிகமாகவுமுண்டானபாபங்களும் ஸர்வஶப்தவாச்யமாய்க்கொண்டு நிவ்ருத்தமாகக்கடவது.

இவன் ஸ்வீகரித்தஸாதநம் பலாவ்யபி(ஓ)சாரியாகையாலும், (உ)"துன்பவினைகள்" என்றும், (ங)"உற்றவிருவினையாய்" என்றும், *பாவமுமறமுமே உபாயபூதனுடைய கோபமுமருளுமாகையாலே அவன் பொறுத்தேனென்னத்திருமதாகையாலும், இவன்தான் பூர்வாகத்தோடு உத்தராகத்தோடு ப்ராரப்தத்தோடுவாசியற ப்ராப்திவிரோதி ஸகலாநிஷ்டநிவ்ருத்திபூர்வகமான விஷ்டப்ராப்திக்கு நிரபேக்ஷஸாதநமாக பகவத்விஷயத்தைப்பற்றி யிருக்கையாலும் சேதநக்ருதமானவற்றில்ஶேஷிப்பதொன்றில்லையிறே; பாஷ்யகாரரும்

(*) (உ) தி-வாய்-கூ-உ-அ (ங) தி-வாய்-க௦-க௦-அ

(க) "వర్తమానం వర్తిష్యమాణఞ్చ సర్వం క్షమస్వ- வர்த்தமாநம்வர்த்திஷ்யமாணஞ்சஸர்வம்க்ஷமஸ்வ" என்று வர்த்தமாநபாபத்தோடேகூட ஆகாமியான பாபத்தையும்கூட்டி அவையெல்லாவற்றையும் க்ஷமிக்கவேணுமென்றபேக்ஷித்ததும்; அத்தைப்பற்றவிறே, உத்தராக(ஃ)ம் அவஶமாகவருமதாகையாலும்,புத்திபூர்வகமாகவந்தாலும் ஜ்ஞாநவாநாகையாலே அநந்தரக்ஷணத்திலே அநுதப்தனுமாகையாலும், ப்ரபத்தவ்யனுடைய ஜ்ஞாநஶக்திபூர்த்திகளையும் க்ருபையையுமநுஸந்தித்து அவ்வநுஸந்தாநத்தாலே த்ருடசித்தனுமாகையாலும், ஸர்வஶப்தாந்தர்ப்பூதமாகக்கடவது;

காலக்ஷேபார்த்தமாகப்பண்ணுமநுகூலவ்ருத்திகளில் ஸாதநபுத்தியின்றிட்டிற்றாகில் அதுவும் ஸர்வஶப்தவாச்யமாகக்கடவது. (உ) "సకృదేవ ప్రపన్నాయ-ஸக்ருதேவப்ரபந்நாய" (ந) "సకృదేవం ప్రపన్నస్య-ஸக்ருதேவம் ப்ரபந்நஸ்ய" என்று புநःப்ரபத்திநிஷேதபூர்வகமாக ஸக்ருத்ப்ரபத்தியே அமையுமென்னாநிற்கச்செய்தேயும் ஆபத்தஶைகளிலே கலக்கத்தாலே ப்ரபத்திபண்ணினானாகில் அதுவும் ஸர்வஶப்தவாச்யமாகக்கடவது; லோகஸங்க்ரஹார்த்தப்ரவ்ருத்திகளும் ஸர்வஶப்தாந்தர்ப்பூதமாகக்கடவது. இவன்*நாட்டாரோடியல்வொழிந்து நாரணனை நண்ணினவனாகையாலே, ஏவம்பூதஜ்ஞாநவான்களாய் வித்தஸாதநபரிக்ரஹம்பண்ணியிருக்கும்ஸாத்விகாக்ரேஸரரானவர்களும் தந்தாமைப்பற்ற விதியின்றிக்கேயிருக்கச்செய்தேயும் இத்தனைபாகமில்லாத ஶிஷ்யபுத்ரர்களைப்பற்ற நாம் இவர்களுஜ்ஜீவநத்துக்கு ஹேதுவாகையொழிய நாஶத்துக்கு ஹேதுவாகவொண்ணாதென்கிற வாந்ருஶம்ஸ்யத்தாலே யநுஷ்டிக்கவேண்டுவன சில கர்மங்களுண்டு; இவை ஆந்ருஶம்ஸ்யத்தாலே யநுஷ்டித்தாலும் ஒருபலத்தோடேஸந்திப்பிக்கக்கடவது; அந்தபலத்தில் இவனுக்கு அபேக்ஷையில்லாமையாலும் உண்டானாலும் அப்ராப்தமாகையாலும் அதுவும்பாபமேயாகையாலே ஸர்வஶப்தவாச்யமாகக்கடவது;

ஆக, "ஸர்வபாபேப்ய:" என்று-அவித்யாகர்மவாஸநாருசிப்ரக்ருதிஸம்பந்தங்கள், பூர்வாகோத்தராக(ஃ)ப்ராரப்தங்கள், ஶரீரஸம்பந்தநிபந்தநமாகவும அபிமாநநிபந்தநமாகவும் ஆந்ருஶம்ஸ்யத்

(க) ஶரணாகதிகத்யம் (உ) ரா-யு-கஅ-ஙங (ந) பாஞ்சராத்ரம்

தாலும் வரக்கடவதாய் ப்ராப்திவிரோதியான ஸகல பாபங்களையும் சொல்லிற்று.

அங்ஙனன்றிபிலே "பாபேப்ய:" என்கிறபஹுவசநத்திலே ஸர்வ பாபங்களும் உபாத்தமாயிற்றதாய் ஸர்வஶப்தத்தாலே இவையெல்லாவற்றையுமென்று ஸாகல்யபரமாகவும் சொல்லுவார்கள்; பாபங்களிலே சிறிதுகிடப்பது ப்ரபத்தவ்யன்குறையாலேயாதல், ப்ரபத்தாவின் குறையாலேயாதலாகவேணுமே; அஹம்ஶப்தோக்தமானஜ்ஞாநஶக்த்யாதிகளில் குறையில்லாமையாலே ப்ரபத்தவ்யன்பக்கல் குறையில்லை; "த்வா" என்கிறவிடத்தில் த்யாகஸ்வீகாரங்களில் வைகல்யமில்லாமையாலே ப்ரபத்தாவின்பக்கல் குறையில்லை.

"மோக்ஷயிஷ்யாமி" என்று ஏவம்ரூபஸகலபாபங்களினுடையவும் நிவ்ருத்திப்ரகாரத்தைச் சொல்லுகிறது. (மோக்ஷயிஷ்யாமி) யாவை சிலபாபங்கள் நிமித்தமாக நீ பயப்படுகிறாய்; அந்தப்பாபங்கள்தானே யுன்னைவிட்டுப்போம்படி பண்ணுகிறேன்; இதில் தாத்வர்த்தத்தாலே அவைதான் என்னைப்பற்றின ராஜகுலஸம்பந்தத்தாலே இவன் நமக்கு ஆஶ்ரயமன்றென்று கள்ளர்பட்டதுபட்டுப் போமென்றபடி;

அதாவது-(க)"வானோமறிகடலோமாருதமோதீயக்மோகானோ வொருங்கிற்றும்கண்டிலமால்" என்கிறபடியே ஆகாஶத்திலேகரந்து கிடக்கிறதோ? ஸமுத்ரஜலத்திலேகரைந்துபோயிற்றோ? காற்றோடேபரந்துபோயிற்றோ? நெருப்பிலேபுக்குவெந்துபோயிற்றோ? மஹாப்ரஸ்தாநம்போயிற்றோ? ;"[illegible]-கண்டகேசைவகண்டகம்" என்னுமாபோலே கன்றாய்வந்தவஸுரனைக்கொண்டுவிளாவாய் வந்தவஸுரனை நிரஸித்தவனுடைய திருவடிகளிலே தலைசாய்த்தவளவிலே அநாதிகாலம் என்னைக்குடிமைகொண்டுபோந்த வலியபாபங்களைப் பார்ஶ்வத்திலும் கண்டிலோமேயென்று ஆஶ்ரயபூதனானவிவனுமறியாதபடிபோகை.

(உ)"நின்னுள்ளேனாய்ப்பெற்றநன்மை" என்று நாம் பகவத்ரக்ஷ்யபூதரென்கிறவநுஸந்தாநமாத்ரத்தாலே "சும்மெனாதேகைவிட்டோடித்தூறுகள்பாய்ந்தன" என்கிறபடியே அநாதிகாலார்ஜிதமான மஹாபாபங்களெல்லாம் காடுபாய்ந்துபோயிற்றென்னுகின்றதிறே.

---

(க) பெரியதிருவ-   (உ) பெரி-தி-ரு-௯-௩

(௧) "యథైషీకాతూలమగ్నౌప్రోతంప్రదూయేత, ఏవంహాస్యసర్వేపాప్మానఃప్రదూయన్తే-யதைஷீகாதூலமக்நௌப்ரோதம்ப்ரதூயேத,ஏவம்ஹாஸ்யஸர்வேபாப்மாநஃப்ரதூயந்தே" என்றும்"ஆயர்குலத்தினில் தோன்றும்மணிவிளக்கை-மனத்தினாற்சிந்திக்கப்போயபிழையும்புகுதருவாநின்றனவும்தீயினிற்றூசாகும்" என்கிறபடியே (௨)"வடமதுரைப்பிறந்ததாதுசேர்தோள்கண்ணன்சரண்" என்று நினைக்க, பூர்வாகோத்தராசப்ராரப்தம்முதலானஸகலபாபங்களும் நெருப்பினிற்பட்டபஞ்சுபோலே பிணங்காணவொண்ணாதபடி தக்த(దగ్ధ)மாய்ப்போமென்கிறது.

இதில்ணிச்சாலே உபாயபூதனானவீஶ்வரனுக்கு இந்தப்பாபவிமோசநத்தில் ப்ரயோஜககர்த்ருத்வமொழியஸ்வயம்கர்த்ருத்வமில்லை; ஆதித்யஸந்நிதியில் அந்தகாரம்போலே தானேவிட்டுப்போமென்கிறது.

இவைதானே விட்டுப்போகையாவது-புகுந்து கழிந்ததென்று தெரியாதபடிபோகை; - அதாவது- இவைஸ்ம்ருதிவிஷயமானாலும் ஸ்வநிர்ப்பர(భ)ரத்வாநுஸந்தாநத்தாலே இவன்நிர்ப்பயனாம்படிபோகை. "மோக்ஷயிஷ்யாமி" என்கிறவிடத்தில் பவிஷ்யதர்த்தஸூசகமானவசநம் பலவிளம்பம்சொல்லுகிறதன்று;"ஏதத்கர்மகரிஷ்யாமி" என்கிறவிடத்தில் தாத்காலிகமான ஸங்கல்பத்துக்குவாசகமாயிருப்போலே ஸத்யஃகாலீநவிரோதிநிவ்ருத்தியில் ஸங்கல்பத்தைச்சொல்லுகிறது. உபாயபூதனுடையவிந்தஸங்கல்பமாத்ரத்தாலே ப்ராப்திவிரோதிஸகலபாபங்களும்போமென்கையாலே, பாபங்களாவன-பகவந்நிக்ரஹரூபமாயிருப்பதொன்றாய், அவன் க்ஷமித்தேனென்னத்தீருமென்னுமிடம் தோற்றுகிறது; சேதநன்பண்ணினகர்மங்கள் அப்போதேநஶிக்கும்; க்ரியாவானானவன் அஜ்ஞனாகையாலே மறக்கும்; ஸர்வஜ்ஞனானவீஶ்வரனுடைய ஹ்ருதயத்திலே கிடந்திறே இவை பலபர்யந்தமாவது; நிருபாதிகரக்ஷகனானவீஶ்வரன்(௩)"நீயென்னைக் கைக்கொண்டபின்" என்கிறபடியே இவனை ரக்ஷ்யத்வேநவங்கீகரித்தவன்று அவற்றைப் பொறுத்தோமென்னத்தீருமே, ஆகைபிறே

---

(௧) சாந்தோ-௫-௨௪-௩ (௨) தி-வாய்-௯-௧-௯ (௩) பெரி-தி-௫-௪-௨

(க) "ஸர்வம் க்ஷமஸ்வ-ஸர்வம்க்ஷமஸ்வ" என்றும், (உ) "க்ருபயா கேவலமாத்மஸாத்குரு-க்ருபயாகேவலமாத்மஸாத்குரு" என்றும் பூர்வாசார்யர்களருளிச்செய்தது. ஆகையாலே இவனுடைய பூர்வாக(ஷ)த்தை க்ஷமித்து உத்தராகத்திலவிஜ்ஞாதாவாயிருக்கும்; ஆகையாலேபாபங்களெல்லாம் பகவத்ஸங்கல்பமாத்ரத்தாலே நிவ்ருத்தமாமென்றதாயிற்று.

(௩) "போர்த்தபிறப்பொடுநோயொடுமூப்பொடிறப்பவைபேர்த்துப்பெருந்துன்பம்வேரறநீக்கித்தன்தாளின்கீழ்ச்சேர்த்து" என்றுமித்யாதிகளிற் சொல்லுகிறபடியே *தேசமறியவோர்சாரதியாய்ச்சென்று சேனையை நாசம்செய்திட்டு நடத்தின திருவரங்கர்தாம் பணித்தமெய்ம்மைப்பெருவார்த்தையிற் சொல்லுகிற ஸித்தஸாதநத்தைப்பற்றினவர்களுக்கு அநிஷ்டநிவ்ருத்திபூர்வகமான விஷ்டப்ராப்தி பலமாயிருக்க, (ச) "ஜராமரணமோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தி யே-ஜராமரணமோக்ஷாய மாமாஶ்ரித்யயதந்தியே" என்று ஜராமரணாத்யாஶ்ரயமான ஶரீரவிமோசநமாத்ரத்தையே பலமாகவிழிந்த கேவலனுக்குப்போலே விரோதிநிவ்ருத்திமாத்ரத்தையே பலமாகச்சொல்லுவானென்?; ஶேஷத்வஜ்ஞாநபூர்வகமாக உபாயவரணம்பண்ணினவிவ்வதிகாரிக்கு இஷ்டரூபமான கைங்கர்யலாபமே ப்ரதாநபலமாய் தத்ஸித்திக்காகவிரோதிநிவ்ருத்தியும் அப்ரதாநபலமாய்க்கொண்டுவருமதாயிருக்கவென்னில்;

இவ்வுபாயவரணம்பண்ணினவிவ்வதிகாரியுடைய பகவத்கைங்கர்யார்த்தித்வமாகிற முமுக்ஷுத்வத்தாலும் பகவதநந்யார்ஹஶேஷத்வரூபஜ்ஞாநபூர்வகமாக ததநுரூபோபாயவரணம் பண்ணினவனுகையாலும் இவன் ஸ்வரூபத்தைப்பார்த்தால் ஏவம்ரூபஶேஷத்வமேநிலைநின்றவேஷமாய் இங்கு நிவர்த்யமாகச் சொல்லுகிறவவித்யாதிகள்வந்தேறிபாகையாலே, அந்த விரோதி-நிவ்ருத்தமானால், (௫) "மமஸஹஜகைங்கர்யவிதய:-மமஸஹஜகைங்கர்யவிதய:" என்று ஸ்வரூபத்துக்கு ஸஹஜமாய் உபாயபலமாய் இவனுக்கு அபிமதமானகைங்கர்யம் "ஆவிஸ்ஸ்யு:-ஆவிஸ்ஸ்யு:" என்கிறபடியே தன்னடையே ஆவிர்ப்பவிக்குமதாகையாலும்,மலயோகத்தாலேமழுங்கின

(க) ஶரணாகதிகத்யம் (உ) ஸ்தோ-ரத்ந- (௩) தி-வாய்-எ-டு-க௦
(ச) கீதை-எ-உ-௯ (௫) அஷ்டஶ்லோகி

மாணிக்கத்தைமாசறக்கடைந்தால்ஸ்வதஸ்ஸித்தமாய்நித்யமானவொ ளிப்ரகாஶிக்குமாபோலேஸ்வாபாவிகமான கைங்கர்யம்ப்ரகாஶிக்கு மாகைபாலேவிரோதிநிவ்ருத்தியேப்ரதாநமென்கிறவாகாரம்தோற்ற ப்ரதாநபலமான கைங்கர்யம் சொல்லாதே ததங்கமான விரோதிநிவ் ருத்தியைச் சொல்லிற்று.

(க) "శేషోహిపరమాత్మనః-ஶேஷோஹிபரமாத்மநः" என்று ஶே ஷத்வேந ப்ரஸித்தமானவாத்மஸ்வரூபத்துக்கு அவித்யாதிகளான விரோதிகள் வந்தேறியென்னுமிடமும்தந்நிவ்ருத்தியே ப்ரதாநமெ ன்னுமிடமும் சொல்லுகிறது;(க)"యథానక్రియతే జ్యోత్స్నామలప్రక్షాళనా న్మణేః। దోషప్రహాణాన్న జ్ఞానమాత్మనః క్రియతేతథా। యథోదపానకరణాత్క్రి యతేన జలామ్బరమ్। సదేవనీయతేవ్యక్తి మసతస్సమ్భవః కుతః। తథాహేయగుణధ్వం సాదవబోధాదయోగుణాః। ప్రకాశ్యన్తేనజన్యన్తే నిత్యాఏవాత్మనోహితే-யதாநக் ரியதேஜ்யோத்ஸ்நாமலப்ரக்ஷாளநாந்மணே: | தோஷப்ரஹாணாந்நஜ் ஞாநமாத்மநः க்ரியதேததா | யதோதபாநகரணாத்க்ரியதேநஜலாம்ப ரம் | ஸ்தேவநீயதேவ்யக்திரஸதஸ்ஸம்பவः குதः | ததாஹேயகுணத் வம்ஸாதவபோதாதயோகுணா: | ப்ரகாஶ்யந்தேநஜந்யந்தே நித்யாஏ வாத்மநோஹிதே" என்று-யாதொருபடி ரத்நத்துக்கு ஆகந்துகமான வழுக்கைப்போக்குகிறவித்தால் ஸ்வாபாவிகமான வொளியைப்ர காஶிப்பிக்கிறதொழிய அபூர்வமானவொளியுண்டாகிறதின்றிக்கே யொழிகிறது; அப்படியே ஆத்மாவுக்கு வந்தேறியான தோஷத் தைப்போக்குகிறவித்தால் ஸ்வாபாவிகமான ஜ்ஞாநத்தைப்ரகாஶிப் பிக்கையொழியமுன்பில்லாததொருஜ்ஞாநத்தையுண்டாக்குகிறதன் றென்றும், யாதொருபடி கிணற்றைக்கல்லஜலாகாஶங்கள் அப்போ துண்டாகிறதன்றே; பூர்வமே உள்வாயிற்கிடக்கிறவற்றைப்ரகாஶி ப்பிக்கிறது; அப்படியே ஹேயகுணங்கள்கழிகைபாலே ஜ்ஞாநாதி குணங்கள் ப்ரகாஶிக்கின்றன; அவையாத்மாவுக்கு நித்யங்களாயன் றோ விருப்பனவென்றும் சொல்லிற்று;

பகவச்சாஸ்த்ரத்திலும், "పూర్వంముక్తాః కర్మబన్ధైర్మద్దేశప్రాప్తిపూర్వ కమ్। నిస్సృజోఽత్రచాభవన్త్యేతే మమసాధర్మ్యమాగతాః ఆవిర్భూతస్వరూపాశ్చవిధ్వ స్తాశేషకల్మషాః। సమస్తహేయప్రధ్వంసాజ్జ్ఞానానన్దాదయోగుణాః। ప్రకాశ్యన్తేన

(க) பகவச்சாஸ்த்ரம்

జన్యన్తే నిత్యాహ్యాత్మగుణాశ్చతే- பூர்வம்முக்தாஃகர்மபந்தைர்மத்தேஶப்ராப்திபூர்வகம் | நிஸ்ஸங்கோசாபவந்த்யேதேமமஸாதர்ம்யமாகதாஃ | ஆவிர்ப்பூதஸ்வரூபாஶ்சவித்வஸ்தாஶேஷகல்மஷாஃ | ஸமஸ்தஹேயப்ரத்வம்ஸாத்ஜ்ஞாநாநந்தாதயோகுணாஃ | ப்ரகாஶ்யந்தேநஜந்யந்தே நித்யாஹ்யாத்மகுணாஶ்சதே'' என்று ஸகலப்ரதிபந்தக கர்மங்களாலும் முக்தராய் நம்முடைய தேஶத்தைப்ராபித்து நம்மோடே ஸாதர்ம்யம்பெற்றவர்கள் முன்புஸங்குசிதமான ஜ்ஞாநாதிகள் ப்ரகாஶிக்கையாலே நிஸ்ஸங்கோசராவர்களென்றும், அஶேஷபாபங்களும் வித்வஸ்தங்களாய்ப்போகைபாலே ஆவிர்ப்பூதமான ஸ்வபாவத்தையுடையவர்களென்றும், ஸமஸ்தஹேயங்களும் கழிகையாலே ஜ்ஞாநாநந்தாதிகுணங்கள் ப்ரகாஶிக்கிறனவித்தனை; உண்டாகிறனவன்று; ஆத்மாவுக்கு நித்யங்களானகுணங்களிறே அவையென்று பகவான்றானேயருளிச்செய்தான்;

ஶ்ருதியிலும், (க) ''పరంజ్యోతిరుపసమ్పద్య స్వేనరూపేణాభినిష్పద్యతే- பரஞ்ஜ்யோதிருபஸம்பத்யஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே'' என்று பரஞ்ஜ்யோதிஸ்ஸைக்கிட்டினால்ஸ்வாபாவிகமானஸ்வரூபம்ப்ரகாஶிக்குமென்று சொல்லிற்றிறே; (உ) ''సమ్పద్యావిర్భావస్స్వేనశబ్దాత్-ஸம்பத்யாவிர்ப்பாவஸ்ஸ்வேநஶப்தாத்'' என்று ஸூத்ரத்திலும் சொல்லிற்று. ஆகையாலே ப்ரதாநபலம் இஷ்டப்ராப்திரூபகைங்கர்யமேயாகிலும்; அதுக்கு விரோதிநிவ்ருத்திமாத்ரமேயபேக்ஷிதமாகிறவாகாரத்தாலே ப்ரதாநமாக விரோதிநிவருத்தியைச் சொல்லிற்று;

கேவலனுக்கு விரோதிநிவ்ருத்தியானவாறே பகவத்ப்ராப்தியும் அநுபவமும் அநுபவஜநிதப்ரீதியும், ப்ரீதிகாரிதகைங்கர்யமும் உண்டாகாதொழிவானென்னென்னில்; (௩) ''యథేష్టవినియోగార్హం శేషశబ్దేనకథ్యతే-யதேஷ்டவிநியோகார்ஹம் ஶேஷஶப்தேநகத்யதே'' என்று கைங்கர்யார்ஹமானஶேஷத்வஜ்ஞாநமுடையனாய் தத்கார்யமான ஸ்வரூபபாரதந்த்ர்யத்தை யநுஸந்தித்து ததநுரூபமான புருஷார்த்தாபேக்ஷையும்பண்ணி, ததநுரூபோபாயவரணமும் பண்ணுகையன்றிக்கே (௪) ''பிறவித்துயரற ஞானத்துள் நின்று'' என்கிறபடியே ப்ரக்ருதிவிநிர்முக்தாத்மஜ்ஞாநமாத்ரத்திலேநின்றுமின்மினி

(க) சாந்தோ- (உ) ப்ரஹ்மஸூ- (௩)
(௪) தி-வாய்-க-எ-க

போலே தோற்றுகிறதன்னைக்கண்டுகொண்டிருக்கிறவளவே புருஷார்த்தமாகச் சொல்லுகையாலே அவனுக்கு பகவதநுபவமும் தத்ப்ரீதியும் ப்ரீதிகாரிதகைங்கர்யமும் உண்டாயிற்றில்லை; அல்லது ஆத்மாவுக்கு கைங்கர்யமாகிற புருஷார்த்தப்ரார்த்தனை ஸ்வாபாவிகாகாரமல்லாமையன்று;

ஶேஷபூதனுக்குக்கைங்கர்யம்ஸஹஜம்; ஜ்ஞாதாவுக்கு தத்ப்ரார்த்தனைஸஹஜம். ஆயிருக்க, கேவலனுக்கு இந்த ஜ்ஞாநம்பிறவாதொழிந்தது ஶேஷியானவீஶ்வரனுடைய இச்சாதீநமானவிநியோகமொழியஸ்வாதீநமாகவருவதொன்றில்லாமையாலே இஷ்டப்ராப்திரூபமான பகவதநுபவத்துக்கும் அர்ஹதாமாத்ரமே இவனுக்குள்ளது; ஶேஷியானவன் அநுபவிக்கும்போதல்லது அநுபவிக்கவொண்ணாதே; ஆகையிறே (க)"క్రియతామితిమాంవద-க்ரியதாமிதிமாம்வத" என்றும், (உ) "கூவிக்கொள்ளாய்" என்றும் ப்ரார்த்தித்தும், "సర్వం కరిష్యామి-ஸர்வம்கரிஷ்யாமி" என்கிற ஸங்கல்பத்தளவிலேநின்றதும்; ஆகையாலே கைங்கர்யம் ஆத்மாவுக்கு ஸஹஜமேயாகிலும் தத்திரோதா(ந)யகமான விரோதியைப்போக்கிக் கைங்கர்யத்தை ப்ரகாஶிப்பிக்கிறான் ஈஶ்வரனேயென்கிறது.

ஆக, "ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" என்று உபாயக்ருத்யம் சொல்லுகிறது;

அன்றியிலே, (ஈ)"మన్మనాభవమద్భక్తో మద్యాజీమాంనమస్కురు । మామేవైష్యసిసత్యం తేప్రతిజానేప్రియోసిమే-மந்மநாபவமத்பக்தோமத்யாஜீமாம் நமஸ்குரு । மாமேவைஷ்யஸிஸத்யந்தேப்ரதிஜாநேப்ரியோஸிமே" என்று-"என்பக்கலிலே நெஞ்சைவை ; என்னையேஸ்நேஹபூர்வகமாக விடைவிடாமல் த்யாநம்பண்ணு ; ஸர்வகர்மங்களாலும் என்னையேயாராதி; என்பக்கலிலே ஸமர்ப்பிதஸர்வப(ர)னாய்க்கொண்டு நமஸ்ஸைப்பண்ணு; அநந்தரம் என்னையே அடையக்கடவை ; நீஎனக்கு ப்ரியனாகையாலே உனக்கு ஸத்யமே ப்ரதிஜ்ஞைபண்ணுகிறேன்" என்று கீழ்ச்சொன்ன ஸ்வப்ராப்திக்கு ஒருஸாகாஸாதநத்தை விதிக்கிறதாகையால் இஶ்லோகத்தில் தனித்துப் பலம்சொல்லாதே அதுக்கு அபேக்ஷிதமான விரோதிநிவ்ருத்தி அங்குச்சொல்லாமையாலும், இவ்வுபாயவிஶேஷஸ்வீகாரம்பண்ணினவதிகாரிக்கு விஶே

(க) ரா-ஆ-௩௰-௫ (உ) தி-வாய்-௩0-௩0- (ஈ) கீ-௩அ-௬௫

ஷேணநிவர்த்த்யமான விரோதிவேஷம்சொல்ல வேண்டுகையாலும், "பாபேப்ய:" என்கிற பதத்தாலும் ஸர்வஶப்தத்தாலும் அந்த விரோதிகளைச்சொல்லி "மோக்ஷயிஷ்யாமி" என்று அவற்றினுடைய நிவ்ருத்தியைச் சொல்லுகிறதென்னவுமாம்; ஆக, "அஹம்" என்று சொன்ன வுபாயபூதனுடைய க்ருத்யம் சொல்லிற்று;

அநந்தரம் "த்வா" என்று நிர்த்தேஶிக்த வதிகாரியினுடைய க்ருத்யலேஶம் சொல்லுகிறது ;-"மாஶுச:" என்று; (மாஶுச:) ஶோகியாதே கொள்ளென்று விதிக்கிறது; இத்தால் "வ்ரஜ" என்கிற விதியோபாதி ஶோகநிஷேதவிதியும் கர்த்தவ்யமென்னுமிடம் தோற்றுகிறது; இனி ஶோகிக்கையாவது - அநிஷ்டநிவ்ருத்திரூப பலத்துக்கு ஸ்வேதர ஸகலஸஹாயாஸஹமாய் வாத்ஸல்யாதிகுண விஶிஷ்டமாய் ஜ்ஞாநாதிகுணவிஶிஷ்டமாயிருக்கிற வஸ்துவை யுபாயமாகப்பற்றி ஸ்வப(ர)ங்களையும் அவன்பக்கலிலே ந்யஸித்து நிற்கிறநிலைக்கு விருத்த(ம்)மிறே;

ஆகையாலே ப்ரணவத்திலே பகவதேகரக்ஷ்யபூதனாகவும் பகவதநந்யார்ஹ ஶேஷபூதனாகவும் சொல்லப்பட்ட வாத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வநிபந்தநமாக வருகிற ஸ்வரக்ஷகத்வாபிமாநத்தையும் ஸ்வஶேஷித்வாபிமாநத்தையும் ஸ்வஸ்வாமித்வாபிமாநத்தையும் ஜ்ஞாநவாசிதாத்வாஶ்ரயமான ஷஷ்ட்யந்தமகாரத்தாலே அதை நிஷேதிக்கிற விடத்திலேநிஷேத்யவாசியான மகாரத்துக்குமுன்னே நிஷேதாக்ஷரமான நகாரம் முற்பட்டாப்போலேயும் புருஷார்த்தத்தில் ஸ்வகீயத்வாதி நிஷேதம்பண்ணுகிற நமஶ்ஶப்தம் கைங்கர்யப்ரார்த்தநாவாசிபதத்துக்கு முற்பட்டாப்போலேயும், ஸர்வதர்மபரித்யாகம்சொல்லுகிறவிடத்தில் த்யாகத்தினுடைய வத்யந்தாபாவத்திலல்லது ஸ்வரூபபூர்த்தியில்லாமையாலும், ஸ்வீகார்யோபாயத்துக்கு உதயமில்லாமையாலும், தத்வாசகமான பரிஶப்தம் த்யாகஶப்தத்துக்கு முற்பட்டாப்போலேயும் "வ்ரஜ" என்று விஹிதமான வுபாயஸ்வீகாரம் ஸித்தோபாயவிஷயமான ப்ரதிபத்திமாத்ரமாய்த் தானுமுபாயமுமின்றிக்கே ஸஹகாரியுமின்றிக்கே யொழிகையாலே தத்வ்யாவர்த்தகமான ஏகபதம் ஸ்வீகாரவிதாநம்பண்ணுகிற வ்ரஜவென்கிறபதத்துக்கு முற்பட்டாப்போலேயும் ந்யஸ்தபரனான விவனுக்குண்டான ஶோகோதயமும் ஸ்வபலாந்வயத்தையும் ஸ்வரக்ஷணாந்வயத்தையும்

காட்டுமாகையாலே, ஶோகம் ப்ரஸ்துதமாவதுக்கு முன்னே நிமிஷதாக்ஷரம் முற்படுகிறது;

ஸ்வகதஸ்வீகாரம் உபகாரஸ்ம்ருதியும் ஸ்வரூபவிருத்தமாய் பரஸ்வீகாரவிஷயத்வமும் பரபலப்ரதிபத்தியுமே ஸ்வரூபாயவாம்படியிறே ஸ்வரூபயாதாத்ம்யத்தைப் பார்த்தாலிருப்பது; ஆகையாலே இவ்வதிகாரிக்கு யாவத்பலப்ராப்தி நிர்ப்பரனுமாய் நிர்ப்ப(ஞ்)யனுமாயிருக்கையே கர்த்தவ்யமென்கிறது.

அதாவது-தன்னுடைய பாரதந்த்ர்யாநுஸந்தாநத்தாலும் உபாயபூதனுடைய நிருபாதிகரக்ஷகத்வாநுஸந்தாநத்தாலும் நிர்ப்பயனுயிருக்கையும், தன்னுடைய வாகிஞ்சந்யாநுஸந்தாநத்தாலும் உபாயபூதனுடைய ஜ்ஞாநஶக்த்யாதி குணாநுஸந்தாநத்தாலும் நிர்ப்பரனுயிருக்கையும் தான் ஶேஷபூதனாகையாலே பலித்வமில்லை; பாரதந்த்ரனாகையாலே உபாயகர்த்ருத்வமில்லை; பலாலாபநிபந்தநமாகவும் உபாயாபாவநிபந்தநமாகவும் ஶோகிக்க ப்ராப்தியில்லை; உபாயாந்தரஶ்ரவணத்திலே ஶோகித்திலனுகில் அவற்றினுடைய துஷ்கரத்வ ஸ்வரூபாநநுரூபத்வாதிதோஷங்களறிந்திலனையும், இவற்றினுடைய த்யாகத்திலல்லது ஸித்தோபாயாந்வயமுண்டாகாதென்னுமிடமும் அறிந்திலனாகையாலே உபாயாதிகாரமில்லை; ஸித்தோபாயஶ்ரவணத்திலே ஶோகித்தானுகில் அவனுடைய ஸஹாயாந்தராஸஹத்வமும் ஸ்வரூபப்ராப்தத்தையும் முதலானகுணங்களையுமறிந்திலன்; அதில் தனக்குக் கர்த்தவ்யாம்ஶமொன்றுமில்லையென்கிற வாகாரமுமறிந்திலனாகையாலே உபேயாதிகாரமில்லை;

ஆகையாலே முன்புற்றை ஶோகாநுவ்ருத்தி ஸாத்யஸாதநயாதாத்ம்யஜ்ஞாநகார்யம்; பின்புற்றை ஶோகநிவ்ருத்தி - ஸித்தஸாதநயாதாத்ம்யஜ்ஞாநகார்யம்; ஸித்தோபாயஸ்வீகாராநந்தரம்ஶோகமநுவர்த்திக்கிறதாகில் த்யாகஸ்வீகாரத்திலந்வயமில்லை; அதுக்குமுன்பு ஶோகித்திலனுகிலும் த்யாகஸ்வீகாரங்களிலந்வயமில்லை; துஷ்கரங்களாய் ஸ்வரூபவிருத்தங்களான ஸாதநாந்தரங்களினுடைய தர்ஶநமும், ஸுகரமுமாய் ஸ்வரூபாநுரூபமானஸாதநதர்ஶநமும் தத்ஸாபேக்ஷதையும் வ்யவஹிதத்வமும் அதிலநுமையும் அஸாமர்த்த்யமும் ஸ்வீகர்த்தாவினுடைய கிஞ்சநதையும் விரோதிபாஹுள்யமும் தந்

நிவ்ருத்தியில் அஶக்தியுமிறே ஶோககாரணம்; இவை யித்தனையு மில்லாமையாலே ஶோகிக்கவேண்டாவென்கிறது;

எங்ஙனேயென்னில்; "ஸர்வதர்மாந்பரித்யஜ்ய" என்று துஷ்கரத்வாதிதூஷித ஸாதநாந்தரங்களை த்யஜிக்கச்சொல்லுகையாலே ஸாதநாந்தரதர்ஶநமடியாக ஶோகிக்கவேண்டா; "மாமேகம்ஶரணம் வ்ரஜ" என்று ஸுகரஸாதநத்தைப் பற்றச்சொல்லுகையாலே அநுரூபஸாதநாதர்ஶநநிபந்தநமாக ஶோகிக்கவேண்டா; "மாம்" என்று வாத்ஸல்யாதி குணவிஶிஷ்டனாகச்சொல்லுகையாலே ஸ்வதோஷமடியாகவும் அவனுடையவப்ராப்தியடியாகவும் தன்னுடைய தண்மையடியாகவும் அவனுடைய துர்லபத்வமடியாகவும் ஶோகிக்கவேண்டா; "ஏகம்" என்று நிரபேக்ஷமாகச் சொல்லுகையாலே ஸாபேக்ஷதையடியாக ஶோகிக்கவேண்டா; "ஶரணம்" என்று அவ்யவஹிதஸாதநமாகச் சொல்லுகையாலே வ்யவஹிதமென்று ஶோகிக்கவேண்டா; "வ்ரஜ" என்று மாநஸவ்யாபாரமாகச் சொல்லுகையாலே அருமையடியாக ஶோகிக்கவேண்டா; "அஹம்" என்று ஜ்ஞாநாதி குணபூர்ணமாகச் சொல்லுகையாலே அஸாமர்த்யமடியாக ஶோகிக்கவேண்டா; அதில் ஸர்வஜ்ஞத்வத்தாலே நிவர்த்யாம்ஶமும் ப்ராப்தவ்யாம்ஶமுமறியானென்று ஶோகிக்கவேண்டா; ஸர்வஶக்தித்வத்தாலே நிவ்ருத்திப்ராப்திகளில் அஶக்தனென்று ஶோகிக்கவேண்டா; அவாப்தஸமஸ்தகாமனாகையாலே அபூர்த்தியடியாக ஶோகிக்கவேண்டா; ஸ்வாமியாகையாலே அப்ராப்தனென்று ஶோகிக்கவேண்டா; க்ருபாவத்தையாலே கார்யம்செய்யுமோ செய்யானோவென்றஞ்சவேண்டா; "த்வா" என்று ஆகிஞ்சந்யத்தைச் சொல்லுகையாலே ஸ்வரக்ஷணாந்வயமடியாக வுபேக்ஷிக்குமென்று ஶோகிக்கவேண்டா; ஸர்வபாபவிமோசகனாகையாலே விரோதிபாஹுள்யமடியாக ஶோகிக்கவேண்டா; (மோக்ஷயிஷ்யாமி) அவை தானே விட்டுப்போமென்கையாலே நிவ்ருத்தியிலஶக்தியடியாக ஶோகிக்கவேண்டா;

ஆக, துஷ்கரத்வாதி தோஷதூஷித ஸாதநாந்தரங்களை த்யஜித்து வத்ஸலனுமாய் ஸ்வாமியுமாய் ஶீலவானுமாய் ஸுலபனுமாய் நிரபேக்ஷனுமாய் பரமாப்ததமனுமாய் நிரவதிகதயாவானுமாயிருக்கிற

வென்னைப் பற்றுகையாலும், (க) "ಸಕೃದೇವಂ ಪ್ರಪನ್ನಸ್ಯ ಕೃತ್ಯಂ ನೈವಾನ್ಯದಿಷ್ಯತೇ-ஸக்ருதேவம்ப்ரபந்நஸ்ய க்ருத்யம்நைவாந்யதிஷ்யதே" என்று என்னையே நிரபேக்ஷோபாயமாகப்பற்றின வுனக்கு கர்த்தவ்யாம்ஶ மில்லாமையாலும் ஸர்வஜ்ஞத்வாதி குணகனான நான் உன்னுடைய வவித்யாதி ஸகலபாபங்களையும் மறுவலிடாதபடிபோக்கி அஸங்குசிதமான வநுபவகைங்கர்யங்களிலே யந்வயிப்பித்து ஆநந்தநிர்ப்பரனும்படி பண்ணுகிறேனென்கையாலும் ஒரு ப்ரகாரத்தாலும் ஶோகிக்கஹேதுவில்லை; நீ உன்னுடைய ஸர்வப(ஂ)ரங்களையும் என்பக்கலிலேவைத்து வாழும் சோம்பனாய் செயல்தீரச்சிந்தித்து வாழ்ந்து கண்ணனைத் தாள்பற்றிக் கேடின்றிக்கேயிருக்கையாலே உன்னைப் பார்த்தாலும் ஶோகிக்கஹேதுவில்லை; ஸர்வஜ்ஞத்வாதிகுணவிஶிஷ்டனான நான் சன்மசன்மாந்தரம் காத்துத் தாளிணைக்கீழ்க்கொள்ளுமவனாய், இருவல்வினைகளும் சரித்து வீடுதிருத்தி விசும்பேறவைக்கப் பாரிக்கையாலே என்னைப் பார்த்தாலும் ஶோகிக்கஹேதுவில்லை; (உ)"துன்பமுமின்பமுமாகிய செய்வினையாய்" (௩)"உற்றவிருவினையாய்" (ச)"நல்வினையும்தீவினையுமாவன்" என்கிறபடியே விரோதியாகிறது என்னுடைய நிக்ரஹாநுக்ரஹங்களாய் *வினைபற்றறுக்கும் விதியானநம்முடையவதீநமாய் நாம் பொறுத்தோமென்னத் தீருமதாகையாலே விரோதியைப் பார்த்தாலும் ஶோகிக்கஹேதுவில்லை.

இனி ஶோகித்தாயாகில் நமக்கு ஶேஷமும் பாரதந்த்ரமுமாய் அநந்யஸாதநங்களிலந்வயமின்றிக்கே யிருக்கிற வுன்ஸ்வரூபத்தையுமழித்து உன்னைப் பலியுமாக்கி ஸ்வதந்த்ரனுமாய்க்கொண்டு ஆதித்யஸந்நிதியிலந்தகாரம் நில்லாதாப்போலே ஹேயப்ரத்யநீகனானநம்முடைய ஸந்நிதியிலே ஹேயம்நில்லாதென்கிறநம்ப்ரபாவத்தையுமழித்தாயாவுதி; (ரு) "ಈಶ್ವರೋಽಹಮಹಂ ಭೋಗೀ-ஈஶ்வரோஹமஹம்போகீ" என்று அஹங்காரமமகாரதூஷிதனாய் "நமமேயம்" என்று மமகாரதூஷிதனாய்,-ரக்ஷகனான நானே "க்ஷிபாமி" "நக்ஷமாமி" என்னும்படி பண்ணிக்கொண்டு அதுக்கடியானபாபம் மூர்த்தாபிஷிக்தமாயிருக்க, ஶோகியாதிருந்த வறிவுகேட்டோபாதிபோரும்; நீயும் என்பக்கலிலே ந்யஸ்தபரனாய் நானும்உன்கார்யம் எனக்கு(ஂ)பரமாகவேறிட்டுக்

(க)　　　(உ) தி-வாய்-௩-க௦-அ　　　(௩) தி-வாய்-க௦-க௦-ஆ
(ச) ௪-திருவ-௫௭　　　(ரு) கீ-கஅ-கங-கச

கொண்டு ஸகலபாபங்களையும் போக்குவேனனபின்பு சோகிக்கை யும், சோகித்தாயாகில் நீபண்ணின ப(்ர)பத்யாஸமும் வ்யர்த்தமாய் நான் பாபவிமோசநம் பண்ணுகிறேனென்றதும் நிரர்த்தகமாய் உன் கார்யத்துக்கு நீயேகடவையாய், பழையபாபபலாநுபவமும் நீயுமாய் விடுவிதி; ஆனபின்பு சோகத்தைவிட்டு நிர்ப்ப(்ர)ரனுமாய் நிர்ப்பய னுமாய் மத்ப்ராப்தியில் நிஸ்ஸம்சயனுமாய்க்கொண்டு ஸுகமேயிரு வென்றதாயிற்று.

ஆக, த்யாஜ்யஸ்வரூபத்தையும், த்யாகம் ஸ்வீகாராங்கமென் னுமிடத்தையும், ஸ்வீகார்யமான வுபாயத்தின் சீர்மையும், தந்நைர பேக்ஷ்யத்தையும், உபாயத்வம் ஔபாதிகமன்றென்னுமிடத்தையும், ஸ்வீகாரம் மாநஸமென்னுமிடத்தையும், உபாயம் ஸர்வசக்தியுக்த மென்னுமிடத்தையும், அதிகாரியுடைய வாகிஞ்சந்யத்தையும், நிவர் த்த்யமான பாபங்களையும், தத்பாஹுள்யத்தையும், தந்நிவ்ருத்தி ப்ரகாரத்தையும், அதிகாரியினுடைய நைர்ப்ப(்ர)ர்யத்தையுஞ்சொல் லித் தலைக்கட்டுகிறது;

ஜீயர் திருவடிகளேசரணம்.

---

சரமச்லோகப்ரகரணம் முற்றிற்று.

திருவரங்கச்செல்வனரென்கிற பரகாலார்யரருளிச்செய்த

ரஹஸ்யார்த்த ப்ரதீபிகையென்கிற

பரகாலநல்லான் ரஹஸ்யம் முற்றிற்று.